உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# தெய்வத் தமிழ்



ஆசிரியர்:

சொ. சொக்கலிங்க ஐயா

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்



# தெய்வத் தமிழ்








ஆசிரியர் :
சைவ சித்தாந்தப் பெருஞ் செல்வர்
ராம. சொ. சொக்கலிங்க ஐயா அவர்கள்
காரைக்குடி.




★

வெளியீடு :
மெய்கண்ட சித்தாந்த வித்தியாசாலை
சிதம்பரம்

கீலக (1968)

2/6

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# பதிப்புரை.

ஸ்ரீ சிவகாம சுந்தரி யம்பா சமேத சிற்சபா நாதரின் திருவருள் துணை கொண்டு எனது அரும் பெறல் தந்தையார் "சைவ சித்தாந்தப் பெருஞ் செல்வர்" சொக்கலிங்க ஐயா அவர்கள் "மன்னுதை விகவிய லின்னிசைத் தமிழ் மொழி" என்னுந் தலைப்பில் எழுதிச், 'சிவநேசன்' வார இதழில் வெளியிடுவித்த அரும் பெரும் பொருள்களடங்கிய கட்டுரையைத் "தெய்வத் தமிழ்" என்னுந் தலைப்பில், அவர்கள் நிறுவிய சிதம்பரம் ஸ்ரீ மெய்கண்ட சித்தாந்த வித்தியாசாலை வெளியீடாக, நூல் வடிவில் சைவவுலகுக்கு வழங்க எண்ணினேம்.

இத்திருப் பணிக்கு உறுதுணையாக இருந்து இதனைத் தமது கண்காணிப்பில் செம்மையான முறையில் அச்சிடச் செய்தும், முன்னுரை எழுதியும் உதவியவர்கள், ஐயா அவர்களின் நன்மாணக்கரில் ஒருவரும், சிதம்பரம் ஸ்ரீ மெய்கண்ட சித்தாந்த வித்தியாசாலைச் சாத்திர போதக ஆசிரியரும் சைவ மரபைப் பேணிக் காத்துத் தமிழகத்திலும் பிற நாடுகளிலும்: சிவ தீக்ஷை, சமய விரிவுரை ஆகியவற்ருல் ஆயிரக் கணக்கான அன்பர்களைச் சித்தாந்த சைவ நெறியில் நிலைநிறுத்தி வருகின்ற ஞானசிரியருமாகிய சிவ ஸ்ரீ தத்புருஷ தேசிகரவர்கள் (பாலகவி) ஆவார்கள். அவர்களுக்கு வித்தியா

சாலை அறங்காவலர்களின் சார்பிலும், சைவப் பெரு மக்களின் சார்பிலும் உளங்கனிந்த நன்றியறிதலைப் புலப்படுத்திக் கொள்ளுகிறேன். சிவநேசர் திருக் கூட்டத்தின் 45வது ஆண்டு நிறைவு விழா நிகழும் இன்று வெளிவருகின்ற இந்நூலைச் சைவவுலகம் வாங்கிப் படித்துப் பயன் பெறுவதாக.

அன்புள்ள,

**ராம. சொ. திருநாவுக்கரசு செட்டியார்**

**காரைக்குடி**
**முத்துப்பட்டணம்**
**10-9-'68.**

2/6

உ

சிவமயம்

பாலருவாயர் துணை

# முன்னுரை.

## தேவகோட்டை சிவஸ்ரீ தத்புருஷ தேசிகர் அவர்கள்.

பரங்கருணைத் தடங்கடலாகிய சிவபெருமான் ஆன்ம கோடிகள் தம்மை விதிப்படி வழிபட்டு உய்யும் பொருட்டாக வடமொழி வேதாகமங்களைத் தாமே நேராகவும், தமிழ்த்தேவார திருவாசகமாதியவற்றை அருளாசிரியர்களை அதிட்டித்து நின்றும் வழங்கி யிருக்கின்றார். முன்னைப் பிறப்புக்கள் பலவற்றிற் செய்த சிவ புண்ணிய மிகுதியினால் சைவமாம் சமயம் சாரும் பேறு பெற்ற சிலர், அச்சிவ புண்ணியத்தினிடையே செய்து சேர்த்த சிவாபசாரப் பயன் குறுக்கிட, அதனால் வடமொழி வேதங்களை வெறுப்பவராகவும், தமிழ்த் தேவார திருவாசகாதிகளை வெறுப்பவராகவும் இருப்பதை நினைந்து வருந்தி, உண்மையை உணர்த்தும் நன்னோக்கம் கொண்டு ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலரவர்கள் ஸ்ரீ வன்றொண்டச் செட்டியாரவர்கள், ஸ்ரீ மெய்யப்ப சுவாமிகளவர்கள் ஆதிய சிவஞானப் பெருஞ் செல்வர்களின் நன் மாணுக்கரும், தென்றமிழ் நாட்டில் சித்தாந்த சைவப் பெருநூல்கள் பலவற்றை ஆக்கி வழங்கிய நூலாசிரியரும் தமது ஞான பரம்பரை செழிக்கப் பல நன் மாணவர்களை உண்டாக்கிய போதகாசிரியரும், தெய்வச் சைவத் திருநெறியைக் கட்டுரைகள், விரிவுரைகள் மூலமாக நிலை நிறுத்திய உரையாசிரியருப், இவற்றால் நிகழும் ஞானதானத்தைச் செய்த ஞானசிரியரும் சிதம்பரத்தில் ஸ்ரீ மெய்

கண்ட சித்தாந்த வித்தியாசாலை நிறுவிச் சைவம் நாட்டிய சான்றோருமாக விளங்கிய எமது ஆசிரியர் **சொக்கலிங்க ஐயா** அவர்கள், கட்டுரை யொன்றெழுதிச் சில ஆண்டுகளுக்கு முன், சிவநேசனில் வெளியிடுவித்தார்கள்.

இதன் இன்றியமையாமை கருதி ஐயா அவர்களின் வழித்தோன்றல்களாகிய சிதம்பரம் ஸ்ரீமெய்கண்ட சித்தாந்த வித்தியாசாலையின் அறங்காவலர்கள், இதனை நூல் வடிவில் வெளியிடுகின்றார்கள்.

இந்தப் பெருநூலின் சிறப்பு இதனை ஊன்றிப் படிக்கும் ஒவ்வொருவராலும் உணரப் பெறும். தெய்வச் செந்தமிழ் மொழியை எழுபத்தாறு அடைமொழிகள் கொடுத்து இந்நூல் பாராட்டுகின்றது. ஆளுடைய பிள்ளையாராதிய அருளாசிரியர்களின் திருவாக்குகளனைத்தும் "பதி வாக்குகளே" என்பதைப் பல்லாற்றானும் உறுதிப்படுத்தும் இந்த நல்ல நூல் இப்போது வெளிவருவது பெரிதும் பயன் தருவதாகும்.

சைவர்கள் தென் மொழியையும், வட மொழியையும் தமது இரு கண்கள் எனப் போற்றும் கடப்பாடுடையவர்கள். அங்ஙனமின்றி ஒரு மொழியின் பால் வைத்த போலிப் பற்றினால் மற்றொரு மொழியை வெறுப்பது ஒரு கண்ணைப் போற்றி வைத்துக் கொண்டு மற்றொரு கண்ணைக் குருடாக்குவதையே ஒக்கும்.

காய்தல், உவத்தல் இன்றி நடுநிலையில் நின்று சிந்திப்பவர்களுக்கு இந்நூலின் அருமை நன்கு விளங்குமென்று கூறி இதனை வெளியிட்ட வித்தியாசாலை அறங்காவலர்களுக்கு எல்லா நலங்களும் உண்டாக எமது ஆன்ம நாயகராகிய ஸ்ரீ மீனாக்ஷி அம்பா சமேத சொக்கேசப் பெருமானின் திருவடிகளைப் பிரார்த்திக்கிறோம்.

நலமே தழைக.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்



சைவ சித்தாந்தப் பெருஞ் செல்வர்

**ராம. சொ. சொக்கலிங்க ஐயா,**

**காரைக்குடி.**

திருவவதாரம் - நள (1856)

சிவபரிபூரணம் - பிரமோதூத (1930)

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# மன்னுதை விகவியல் இன்னிசைத் தமிழ்மொழி.

எக்காலத்தும் நிலைபெற்று விளங்குகின்றதும் தெய்வத்தன்மை வாய்ந்ததும், இலக்கணவமைதி பெற்றதும், இனிமையே தருவதும், பற்பல அற்புத மகிமை நிறைந்தெங்கணும் பரந்த கீர்த்தி மிகுந்ததும், இன்னோரன்ன பல் சிறப்பினது மாகிய செந்தமிழ் மொழியானது, உலகெலா முணர்ந்துய்யும்படி சிருட்டியாரம்பகாலத்தில் பிரமஞேத்தமராகிய சிவபிரான் முகமாக வெளிவந்து விளங்குகின்ற முன்னைப்பழம் பொருள் மொழியாகும். இதனை, "ஆரியமுந் தமிழு முடனே சொல்லிக் காரிகை யார்க்குங் கருணை செய்தானே" என்னுந் திருமந்திர முதலிய, சுருதிகள் விளக்குகின்றன. இத்தமிழ், இயல், இசை நாடகமென்னும் மூவகை நூல்களிலும் பரந்து விளங்குகின்றது. இதனை, "முத்தமிழ் விரகன்" என்னுஞ் சுருதி முதலியவைகளாலுங் காணலாம்.

இப்பெருஞ் சிறப்பு வாய்ந்த செந்தமிழ் மொழியை நன்குபேணி வளர்த்துப் போற்றிவந்த

பிராமணோத்தமர் பலராவர். அவர் யார் யாரெனில், சிவபிரான், கணேசர், சுப்பிரமணியர், அவரது மாணாக்கராய அகஸ்திய முனிவர், அவர் மாணாக்கர் திருணதூமாக்கினி முனிவரென்கின்ற தொல்காப்பியர், பேராசிரியர், இளம்பூரணர், சேனாவரையர், நச்சினார்க்கினியர், ஞானசம்பந்தர், வாகீசர், சுந்தரர், மணிவாசகர், மெய்கண்ட தேவர் அவர் மாணாக்கராகிய சகலாகம பண்டிதரென்ற பிரசித்தி நாமம் பெற்ற அருணந்தி சிவாசாரியர், மறைஞான சம்பந்த சிவாசாரியர், தில்லை மூவாயிரவரிற் சிறந்து நடேசப்பெருமானால் புகழ்ந்து பாடப் பெற்ற உமாபதி சிவாசாரியர் முதலிய சைவர்களும், பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், திருமழிசையாழ்வார், மதுரகவியாழ்வார், பெரியாழ்வார், ஆண்டாள், தொண்டரடிப்பொடியாழ்வார், பரிமேலழகர், ஜீயர்கள், திருப்பாணாழ்வார், வில்லிபுத்தூராழ்வார் முதலிய வைஷ்ணவர்களும் மற்றுஞ் சமயிகள் பற்பலரு மென்க. சிவபிரான் பிராமணனென்றும், விஷ்ணு க்ஷத்திரியனென்றும் பிரமன் வைசியனென்றும், இந்திரன் சூத்திரனென்றும், தேவஜாதியை நால்வகைப்படுத்திச் சுருதிகள் கூறுகின்ற முறையில் எத்தேவரினுஞ் சிறந்த மெய்த்தேவனாகிய சிவமகாதேவன் பிராமணோத்தமனென்பது அச்சுருதியாதியாராய்ச்சிவல்லார் யாவரும் தெரிந்த உண்மையே.

சர்வாண்டபிண்ட சராசர சீவகோடிகளுக்கெல்லாம் பரமகர்த்தா, விசுவரூப விசுவகாரண விசுவா

தீத விசுவசேவிய விசுவாந்தரியாமி முதலிய பரத்துவ விளக்க வரத்திரு வாக்கியங்களால் வேதாகமாதி விசேட நூல்கள் விதந்தெடுத்தோதுகின்ற பசுபதி நாமத்தொரு முழுமுதல்வனாகிய சிவபிரானே யாதலால், அவனே, சுரர்நரர் மிருக பக்ஷியாதி பலவகைச் சீவர்களும் அவரவர் விருப்பங்களை வெளிப்படத் தெரிவித்து வேண்டிய பெற்றுய்தற்காகவே சிருட்டி ஆரம்ப காலத்தில் பலவகைப் பாஷைகளை வழங்கவைத்தருளினன். சிவனே சீவர்கள் பகுதிக்கிசையப் பல்வேறு வகையாக வகுத்துவைத்த அப்பாஷைகளெல்லாம் சிவ சம்மதமேயாதலால், அவற்றுள் ஒன்றையேனும் எவரேனும் இகழ்தல் கூடாது. இகழ்வரேல் சிவ நியமன விஷயத்திற் பழுது கூறிய சிவாபசாரிகளாவர். அவ்வப்பாஷைகளும் அவ்வச் சீவர்களால் ஆங்காங்கேயும் சிவாஞ்ஞையால் வழங்கப்பெற்றே அவ்வச் செயல் வகைகளுடனாக உலகம் நடைபெறுகின்றது. இது பொது நோக்கம்.

இனிச் சிறப்பாக நோக்குங்கால், இப்பாஷைகள் எல்லாவற்றுள்ளும் இலக்கணவமைதி முதலிய சிறப்பியல்புகள் வாய்ந்து சிறந்து விளங்குவன தென்மொழி வடமொழி என்னுந் திருமொழிகளிரண்டுமே. இவ்விரண்டில் தென்மொழி, தமிழ் நாட்டிற் பிறந்த பிராமணருக்கும் மாதுரு பாஷையாய்த் தங்களில்லங்களில் சதாகாலமும் பேசும் பாஷையாகவும், தாய்மார் தம்மக்கட்குப் பேசப் பழக்கிவரும் பாஷையாகவுமிருக்கின்றதையும்

நோக்காது சில அறிவிழந்த பிராமணர் தென்மொழியையும், உற்று நோக்கும் உண்மையறிவிழந்த சைவர்கள் சிலர் வடமொழியையும், இகழ்ந்து சிவநியம நிந்தகர்களாய் நரகுக்காளாதல் நோக்கி, அவற்றினுண்மை விளக்கமாக இஃது எழுத நேர்ந்தது. தென்வட சொற்கள் திசைகளைக் குறிப்பன. இவற்றுள்ளும் தென் என்னுஞ் சொல் அழகு என்னும் பொருளுந் தருதலால், வடமொழியினும் சிறப்புரிமை அச்சொல்லளவினும் விளக்கி நிற்பது தென்மொழி என்னுஞ் செந்தமிழ்மொழியே யாம். சிவபிரானே இவ்விரு மொழியையும் வகுத்த தலைவனாயினும் அவன் வட மொழியைக் காட்டிலும் தமிழ் மொழியில் அதிக விருப்பினனென்பதை இனி வரும் போதிய ஞாயங்களாற் காண்க.

மேற்கூறியபடி தமிழ் மொழியை அமிழ்தினுமினியதாக ஆதரித்து வந்த பிராமணர்களில் முதல்வராகிய சிவபிரான், பன்னெடுங் கால முன்னரே தொடங்கித் தாமே தலைவராய் நியமித்துத் தொடர்ந்து வரும்படி தாபித்துப் பெரும்பாலும வேறு மொழி விரவாது நடத்தி வந்த முச்சங்கங்களிலும் அதிகப் பிரியத்துடன் வளர்த்து வந்தது மலர் தமிழ் மொழியே.

சிவபிரான் சங்க நூல்கள் சிதறுண்ட ஒருழிக் காலத்தின் பின்னர் அகப்பொருணூல் வேண்டிய புலவர்களுக்கு, "அன்பினைந்திணை" என்று தொடங்குஞ் சூத்திர முதலாக அவ்வகப் பொருணூல் தாமே பாடிக்கொடுத் தருளியதுங் குளிர்தமிழ் மொழியே.

சிவபிரான் வடமொழியிலும் வல்லுநனாகிய பாண்டியன் ஐயம் நீங்கும் பொருட்டு, வடமொழி வேதாகமாதி நூலுணர்ச்சி மிக்க சிவத்துவிஜனாகிய தருமிக்கு, அப் பொற்கிழி கிடைப்பிக்கத் திருவுளங் கொண்டு, தாமே "கொங்குதேர் வாழ்க்கை யஞ் சிறைத் தும்பி, காமஞ் செப்பாது கண்டது மொழிமோ, பயிலியது கெழீஇய நட்பின் மயிலியற் செறியெயிற்றரிவை கூந்தலின், நறியவு முளவோ நீ யறியும் பூவே" என்று ஐய நீக்கி உய்வைத் தரும் தெய்வத் தனிக்கவி பாடியருளியதும் பசுந் தமிழ் மொழியே.

சிவபிரான் சேரர் பெருமான் (கழறிற்றறிவார்) எல்லாப் பாஷைகளும் அறிந்தவ ராயிருந்தும் அவ ருக்குப் பாணபத்திரர் மூகமாக, "மதிமலி புரிசை மாடக் கூடற், பதிமிசை நிலவு பானிற வரிச்சிறகன்னம் பயில்பொழி லால வாயின், மன்னிய சிவன் யான் மொழிதரு மாற்றம், பருவக் கொண்மூப் படியெனப் பாவலர்க், குரிமையி னுரிமையி னுதவி யொளிதிகழ், குருமா மதிபுரை குலவிய குடைக்கீழ்ச் செருமா வுகைக்குஞ் சேரலன் காண்க, பண்பா லியாழ்பயில் பாணபத்திரன், தன்போ லென்பா லன்பன் றன்பாற், காண்பது கருதிப் போந்தனன், மாண்பொருள் கொடுத்து வரவிடுப் பதுவே" என்று அரும்பொருள் விளக்கும் இருங்கவி பாடியருளியதும் அருந்தமிழ் மொழியே, சிவபிரான் இப்பொன் றமிழ் மொழியில் மன்றமிக் கெழுந்து வளரும் பேராசைபெருகலாற்றுமே பாடியருளும் அம்மட்டி

லமையாது, தமது, "திருவடி யுளம்வைத் துருகும் மெய் யன்பே, ஒருவடி வாக்கொண் டருளிப் புவியுய, வருமணி வாசகர் திருமணி வாக்கினின் றெழுதிரு வாசகம் மொழியுமந் நாளெலாம், வரன்முறை கேட்டவ் வரியமெய் யன்பழ, துரிமையிற் பன் முறை பெருகவுண் டிருந்தும், தெவிட்டாது மேன் மேற் சிறந்தெழு வேட்கையால், அனையமெய் யன்பர் முன் புனைமலர்த் திருவடி, நனிதவம் புரிபுவி வனி தையின் முடிமிசை, வினையொழிந் துய்யுமா வினிதுவைத் தருளி, நடந்துவந்து அவர்திரு நல னெடுத் தோதி, உடங்குதாம் பணிவுரை யுணர்த்தி நேர் வேண்டி, எழுதொணுத் திருக்கரத் தினிற்பனை யிதழெடுத் தெழுதிமேற் கொண்டதிவ் விருந்தமிழ் மொழியே; பின்னரும் வேட்கை பெருகலாற் சிற் சபை தன்னில்வந் திறைஞ்சுமா தவனைய ஞதிய, தேவர்க்கனைய திருவாசகமலர், பாவிற் சிறந்தொளிர் பாவனைப் பொருள்விரித், திவ்வமு தும்முயிர்க் கின்புதந் துய்விக்குந், தெய்விகத் திருவமுதுய்மினீ ரென்றுரைத், தருளுந் தாத்ததித் தெருள்தமிழ் மொழியே; மேலுமத் திருந்துபா வேட்கை மீதூர் தலின், ஏறுமைக் காப்புச்செய் தித்திரு வாசகம் மாணிக்க வாசகன் மணிவாய் மலர்தரப், பேணிச் சென் றனையன் முன் பெருமைசொற் றமைந்திருந் தழகிய திருச்சிற் றம்பல முடையவன், எழுதிய தென்றுகைச் சாத்திட் டிருஞ்சபை. யினில்வைத் திலக்கிய தித்தமிழ் மொழியே." சிவபிரான் தாமே பாடியருளிய வேதாகம புராணுதிய வடமொழி, கடிய தொனியினதாய் (வல்லோசை யுடையதாய்)

இருத்தலால், அவ்வேத சாரங்களை, இனியதொனி யினதாய்க் (மெல்லோசை யுடையதாய்) கேட்கும் போதே யார் செவிக்கும் இன்பந் தருவதாய் உள்ள தமிழ் மொழியில், நமது சார ரூபனொருவன் நமக்கு முன்னின்று பாடக்கேட்டு இன்புற வேண்டுமென்று திருவுளங் கொண்டு, தமக்கு முன்னுள்ள சுத்த வித்தியா மய நிலைக் கண்ணுடியினின்றுந் தமது சாரமாகிய பேரழகையே சுந்தரா வருக வென் றழைத்தருளி, அக்கண்ணுடியினின்றும் நீலகண்ட பாலநேத்ர இந்துசேகராதிகள் விளங்க வந்து வணங்கிய ஸ்ரீருத்ர மூர்த்தியாகிய சுந்தரரைத், தமது திருவுளக்கருத்து நிறை வேறுதற்காகவே, ஒரு முகாந்திரங் காட்டிப் பூமியில் வரச்செய்து, அவ்வுருத்திரர் மூன்று வயது நர பாலரூபராய்ச் சடைய ரிசைஞானியா ரிருவர்க்கும் புத்திரராய் வந்து வளர்ந்து வருங்கால், தாமே வலிந்து வந்து தமது திருப்பெயராய ஆரூரன் என்ற நாமகரண முதலிய வெல்லாம் செய்து, தம்மால் நியமிக்கப் பெருத மணத்தை வழக்குப் பேசி விலக்கித், திரு வெண்ணை நல்லூரில் இடபாரூடராய் எதார்த்த ரூபங்காட்டி, அச்சுந்தரர் தாம் வந்த ஆதிசைவ மரபுக்குரிய சிவாலய பூஜாதிகளிற் சென்றுவிட்டால் அவர் முகமாகத் தமிழ்ப் பாடல் கேட்க விரும்பிய தமது கருத்து நிறைவுறுதென்ற அவசர நோக்கத் தால், தாம் ஆரிய வேதமாகிய "தூமறை பாடும்" வாயராய் இருந்தும், தமிழ் விருப்ப மிகுதி விளங்க அன்பனே, ஆலயபூஜாதியைக் காட்டிலும், நமக்கும் அன்பிற் பெருகிய சிறப்பின் மிக்க பூசனை செந் தமிழால் நம்மைப்பாடுந் திருத்தொண்டே யாகும்,

" ஆதலால் மண்மேல் நம்மைச் சொற்றமிழ் பாடுக" என்று கூறியருளி, அவ்வாறே அவர் பாடியருளக் கேட்டுப் பேரின்புற்றதும் பெருந்தகை வாய்ந்த அருந் தமிழ்மொழியே.

மேற்காட்டியபடி சுந்தரர் சொரூப நிலை முதலிய மகிமைகளும், அவர் முகமாகச் செந்தமிழ்ப் பாடல் கேட்டின்புறுதற்கே, கண்ணுடியினின்றும் சிவபிரான் அழைத்தருளின ரென்றது முதலியவற்றின் உண்மையும் அச்சுந்தரரே முடிவில் " தானெனை முன் படைத்தா னதறிந்து தன்பொன்னடிக்கே, நானென பாடலந்தோ" என்றருளியது முதலிய பற்பல தேவாரங்கள், பெரிய புராண முதலிய சித்தாந்தத் திருமுறைகளெல்லாம் உள்ளபடி தெளிவாய் விளக்குகின்றன. அவையெல்லாம் சிவ சுந்தரசாயாரூப சிவமகிமா சங்கிரகம் திருத்தொண்டர் புராணசார விளக்கம் சுந்தரர் பிள்ளைத்தமிழ் முதலிய நூல்களில் ஞாய முறையாக விளக்கினும். அங்கங்கே காண்க ஈண்டு விரிப்பிற் பெருகும்.

இவ்வாறு சிவபிரான் திருவெண்ணெய் நல்லூரில் சுந்தரர்க்கு நேர் வந்து அருளிய முதன் முறையிலேயே, தாம் கயிலையினின்றும் பூமிக்கு வரச் செய்தது, தமிழ்ப் பாடல்கள் கேட்டின்புறுதற்கென்பதே உண்மை யென்பதும், அவர் இரு பெண்களை நந்தவனத்திற் கண்டு மனசை அவர்களிடம் போக்கியது, பூமியிற் செல்லுதற்கொரு காரணங் காட்டுதற்காகவே சிவபிரான் அவ்வாறு செய்வித்த வியாசமே என்பதும் செவ்வே விளங்க, (பெரிய புராணம்) 'முன்பும்நீ நமக்குத் தொண்டன் முன்னிய

வேட்கை கூரப் பின்புநம் ஏவலாலே பிறந்தனை மண்ணின் மீது" நாம் உன்முகமாகத் தமிழ்ப்பாடல் கேட்க வேண்டு மென்று முன்னிய வேட்கை அதிகப்படுதலால், நம் ஏவலால் பூமிக்கு வந்தனை, நமது கருத்து நிரம்பும்படி "சொற்றமிழ் பாடுக" என்று கூறியருளிப் "பித்தாபிறைசூடி" என்றருளிய ஆரிய வேதசாரமாகிய சீரிய தமிழ்ப்பதிகம் கேட்டின்புற்ற பின்னும், அத்தமிழில் வைத்துள்ள பேராசை பெருகுதலால் அம்மட்டிலொழியாமல் மேலும் மேலும் அவ்வருந் தமிழ்ப்பதிகங்கள் எப்போதுங் கேட்டின்புறக் கருதியே, அன்பனே! நீ இவ்வாறே எப்பொழுதும் பற்பல தலங்களிற் சென்று பாடுக வென்றருளியதும் பசுந் தமிழ் மொழியே.

ஒன்றையும் பற்றாது தத்துவாதீதனாய் நித்திய திருப்தனாய் விருப்பு வெறுப்பற்ற தன்னந்தனிப் பரம்பொருளாகிய பரமசிவனுக்கு இத்தமிழ் மொழி தேவாராதிய திருமுறைகளில் இத்தனை விருப்புள்ளதானால், இது அவனது பரத்துவ நிலைக்கு இழுக்கன்றோ வென்று உண்மை யறியார் மலையாமைப் பொருட்டே, சேக்கிழார் பெருமான், "நல்லார் வெண்ணெய் நல்லூரருட்டுறை மேவிய நம்பன், புரமெய்தான், சொல்லார்தமி ழிசை பாடிய தொண்டன்றனை யின்னும், எல்லாவுலகுய்யப், பல்லாறுலகினினம்புகழ் பாடென்றுறுபரிவின் அருள்செய்தான்" என்று விளக்கியருளினர். இத்திருவிருத்தத்தில்தேவாராதி திருமுறைகளை உலகெலாமுணர்ந்து விரும்பிப் பாராயணஞ் செய்து சைவசித்தாந்தத் தனி நெறி பற்றி நின்றுய்தற்காகவே, திரு

வெண்ணை நல்லூரருட்டுறை மேவிய நம்பனுகிய புரமெரி செய்தருளிய மகாவீரன், தானும் விருப்பி இன்னும் பல வகையாகப் பல தலங்களிற் சென்று பாடுக வென்றருள் செய்தான் என்னும் உண்மை காண்க.

இச்சை அறிவு செயல்கள் ஆன்மாக்களுக்குமுள்ளனவே, ஆயினும் அவர்கள் பரதந்திரராதலால், சுதந்திரனுகிய சிவபிரான் இச்சித்துடனின்று தானும் இச்சித்தாற்ருன், அவ்வான்மாக்கள் இச்சித்தலும், அவன் அறிவித்துடனின்று தானும் அறிந்தாற்ருன், ஆன்மாக்கள் அறிதலும், அவன் செய்வித்துடனின்று தானும் செய்தாற்ருன் ஆன்மாக்கள் செய்தலும் நிகழும். இதுவே சித்தாந்த நூற்றுணிபு. இவ்வுண்மை உற்று நோக்குஞ் சித்தாந்தச் செல்வர்கள், சிவபிரான் திருத் தமிழ்த் தேவாராதிய திருமுறைகளை அதிகமாக இச்சிப்பது அவ்வுண்மை நூல்களை உலகெலாம் இச்சித்து இறுகப்பற்றி நின்று உய்தற்காகவே யாதலால், அதுபற்றி அவனது பரத்துவ நிலைக்கு இழுக்கின்மை தெளிய விளக்குவர்.

இச் சுந்தரர், திருத்தொண்டர் மகிமை உலகெங்கும் விளக்கத் திருவுளங்கொண்டே, எப்போதும் தேவாசிரயன் முன் பணிந்து பின்பு கோயிலுட் செல்வதே தமது வழக்கமாயிருக்கவும், ஒரு நாள் வணங்காமற் சென்றனர், அது அத்திருத்தொண்டர் மகிமை சிவன் முகமாக வெளி வருக வென்னுங் கருத்தேயாம். தியாகேசர், சுந்தரர் கருதியபடியே தமது விருப்பமும் மூற்பட்டு விரைதலால், அவர்

தமது சந்நிதிக்கு வருமளவும் கூடத் தாமதியாது, அன்று புது வழக்கமாக விரைந்து திருவாயின் முன் வந்து அன்பனே! திருத்தொண்டரைப் பாடுக வென்றருளவும், சுந்தரர் அத்திருப்பாடல் சிவமுக மாக வரக் கருதியதற் கிணங்க எம்பெருமானே, அடியேன் அபார சாகரமான திருத்தொண்டர் மகி மையில் எதை யறிந்து என் சொல்லிப் பாடுவே னென்று விண்ணப்பஞ் செய்யத், திருவாரூரில் வீற்றிருந்தருளுந் தியாகேசர் தில்லை நலங் கருத் துட் கொண்டு, தில்லைவாழந்தணர் தம் அடியார்க் கும் அடியேன் என்று முதல் கொடுத்தருளினர். இது திருவாரூருக்கும் தில்லைக்கும் ஒற்றுமை நயங் களுள வெனக் கருதிய திருவுளக்குறிப்பே போலும். வேதாகமாதிகளை வடமொழியில் பாடி யருளிய தமது வழக்கத்தை மாற்றி, அவ்வட மொழியைக் காட்டிலும் அதிவிருப்பம தமக்குண்மை விளங்க அம்முதல் கொடுத்தருளியது முதுதமிழ் மொழியே.

இனிச் சேக்கிழார் பெருமான். சிற்சபேசரைத் திருத்தொண்டர் சீர்பரவுதற்கு, முதல் தந்தருளுக வென்று பொதுவாக வேண்டினரன்றித், தமிழ் மொழியில் தருகவென்று வேண்டினரல்லர்; அங்ஙன மாகவும், தமது அதிவிருப்பம் விளங்கவே "உல கெலாம்" என்னும் முதல் தந்து விரித்தருளியதும் திருத்தமிழ் மொழியே.

சிற்சபேசர் உலகெலாம் என்ற செந்தமிழ்மொழி யை ஐந்தெழுத்தினமைய வைத்து, வேதாகமங்க ளருளிய சகள நிஷ்கள சதாசிவரூபத்தின் மேலாய நிஷ்கள சிதாகாச வெளியினிடமாக விளக்கியருளின

மையால், இத்திருவைந்தெழுந்து, அவ்வேதமத்தியில் மல வெழுத்தை முன் கொண்டு விளங்குகின்றதும், சிவாகமங்களில் அம்மல வெழுத்தைப் பின் கொண்டு விளங்குகின்றதுமாகிய திரு வைந்தெழுத்தைக் காட்டிலும் மிகச் சிறந்ததென்றும் தமிழ் மொழிகள் பற்பல விருப்பவும் உலகெலாம் என்னும் அற்புதநிலைய திப்பிய மொழியையே முற்பெற அருளியது, அம்முதல் கொண்டு வெளிவரும் பெரிய புராணம அம் முதலிலிருந்து நீண்டு அபிவிருத்தியாய் விரிந்து விளங்குதற்கே என்றும், இது கரணங்களாற் செய்யாது நினைப்பு மாத்திரத்தால் சிருஷ்டியாதிய செய்கின்ற சிவபிரான், உலகெலாம் தம்மில் ஒடுங்கிய பின், ஒடுங்கிய முறையே அவ்வித உலகெலாம் சிருஷ்டியாய் வெளிவரக் கருதி உலகெலாம் என்று நினைத்தளவிலே அந் நினைப்பே பல்லாயிரங்கோடி அண்ட பிண்ட சராசரங்கள் அபிவிருத்தியாகி வெளிவரச் செய்தமை நேர் கண்ட அனுபவராசி நோக்கிச் செய்த திருவருட் செயலே என்றும், சடப் பொருளாகிய வெண்கல மணியை அடித்தால் அவ்வோசை சிறிது நேரம் நீண்டொலிப்பதை நேரே காண்கின்ற காட்சிப் பிரமாணத்தாலும், முருகப் பெருமான் சூரபன்மனுடன் போர் செய்யுங்கால் சூரபன்மன் நம் பெருமானுடைய தேர்மேல் உள்ள கொடியைப் பாணங்களாலறுத்து வீழ்த்தித் தான் வெற்றி பெற்றதாகத் தானே தன்னொரு வாயில் ஒருசங்கம் வைத்தூதிச் செயத்தொனி செய்த பின்பு, நமது பெருமான் சூரபன்மன் தேரிற் கொடியை அறுத்துக் கடலில்

வீழ்த்தி வாளாவீற்றிருந்தருளினர், இதனுலும் அவரது விருப்புவெறுப்பற்றபரத்துவநிலை விளக்கமாம், சூரபன்மன் கொடி அற்றது தெரிந்தவுடனே, பூதகணத் தலைவருள் ஒருவராகிய பானு கம்பரென்பவர் தமது ஆயிரம் திருவாய்களிலும் ஆயிரம் திருச்சங்கங்கள் வைத்தூதி எந்த வீரர்களாலும் மாற்ற முடியாது இயற்கையாயுள்ள குக பரத்துவ செயத்தொனியை விளக்கி யருளினர். அவ்வோசை பல்லூழி காலம் நீண்டு தங்கியது. இதனை, "கானு கம்படு கந்துகத் தேருடைப், பானு கம்பன் பனிமதி யாயிரம், மானு கம்பலை வாயில் வைத்தூதலுந், தானு கம்பல தங்கிற்றவ் வோசையே". என்றருளிய கந்தபுராணத் திருவிருத்தத்தாலறிந்த ஆகமப் பிரமாணத்தாலும், சடப்பொருள்களினின்றெழுகின்ற தொனிகளே இவ்வாறு நீளுமாளுல் சித்பொருளாகிய சிதாகாசத்தினின்றெழுந்த "உலகெலாம்" என்னும் சின்மயத் திருத்தொனி வேண்டுமளவும் நீண்டு செல்லு மென்பது சொல்லாமலே அமையும் என்றும், சிற்சபேசர் திருவருளே, சேக்கிழார் பெருமான் திருவாக்கினின்றும் "உலகெலாம்" என்ற திவ்ய பஞ்சாக்ஷரத் திருத்தொனியை (4286) திருவிருத்தம் வரை நீண்டொலிக்கச்செய்து இனி இம்மட்டிலமையு மென்று நிறைவு செய்ததென்றும், இவ்வதிரகசிய அபார மகிமை வாய்ந்த பெருஞ் சிறப்பினுல் இந்நூல் (பிரம வித்தை) பெரியபுராணம் என்னும் பெரும் பெயர் பெற்றுச் சர்வ லோகப் பிரசித்தியாய் விளங்குகின்றதென்றும், உண்மை யுணர்ந்த உத்தமர்கள் ஞாய

முறையாக எடுத்து விளக்கிச் சிரமேற் கொண்டு நித்திய நியம சிரவண மனன தியான முறையில் சிவா நுபவந் திளைத்து வாழ்கின்றனர். பி ர ம ம் - பெரியது. வித்தை-புராணம். தனித்தனி முற்று யுள்ள இவ்விரு மொழியில் முதன் மொழி துவ்வீறு கெட்டுக் குறிப்பு வினைப் பெயரெச்சத் தொடராய்ப் பெரியபுராணம் மென்றுயது.

சிவபிரான், உமாபதி சிவாசாரியர், வேத சிவாகமாதி வட நூல் வல்லுநராய் பௌஷ்கராகம பாஷ்ய கர்த்தாவாயிருப்பவும் அவர்க்கு "அடி யார்க்கு எளியன்சிற் றம்பலவன் கொற்றங், குடி யார்க்கு எழுதியகைச் சீட்டுப் - படியின்மிசைப், பெற்றுன் சாம்பானுக்குப் பேதமறத் தீக்கை செய்து முத்தி கொடுக்க முறை". என்றுபுசழ்ந்து பாடிக் கொடுத்ததும் பாவனத் தமிழ் மொழியே.

மேற்கூறிய பலரும் வட மொழியிலும் வல்ல ராயிருக்கவும் ஒருவர்க்கேனும் அம்மொழியில் உப யோகிக்காமல் எல்லாம் தமிழ் மொழியிலேயே உப யோகித்தமையால் சிவபிரான் இவ்வினிய தமிழில் அதி விருப்பின ரென்றது செவ்வே தெளிவாம். தமிழ் என்னுஞ் சொல்லின் பொருளும் இனிமை என்பதேயாம். இதுகாறும் கூறிய வாற்றுல் பிரா மண சிரேஷ்டராகிய சிவபிரான் தமிழில் அதி விருப்பினராய் அதனை வளர்த்து வந்தமை ஒருவா ருக அடியேன் சிற்றறிவுக்கு எட்டியமட்டில் விளக் கினேன். இனி வருவனவற்றிலும் இம்முறையே கொள்க. அறிவிற் சிறந்த ஆராய்ச்சி வல்லார் இன்னும் பற்பல உண்மை காட்டி விளக்குவர்.

இனிச்சிவப்பிராமண சிவகுமாரராகிய கணேசர் தம்மை வழிபடுவார் யாவர்க்கும் விக்கினம் நீக்கி இஷ்டசித்தி பூர்த்தி செய்தருளுகின்ற பரமபதி யாய்ப் பிரணவரூப மூல முதற் பொருளாய்த் தமக் கென ஒன்றையும் வேண்டாத நித்திய திருப்தரா யிருந்துப், தர்மை, சிவபக்த மலமுத்த சிரேஷ்டர் களாகிய உண்மை நாயன்மார் சரித்திரமகிமை தெரிவித்தருளுக வென்று வேண்டிய நம்பியாண் டார் நம்பிகள், வடமொழி வேதாகமாதி நூல்கள் முற்றும் தம்முகமாகவே ஓதியுணர்ந்து அம்முறை யே தர்மைப் பூசித்து வருகின்ற தெய்வச்சிறப் பினரா யிருந்தும், அவர்க்குத் திராவிட வேத சிரோ ரத்தினமாகிய திருத்தொண்டத் தொகையையே எடுத்துக்கூறி, அதன் பொருள் விரித்துத் திருத் தொண்டர் மகிமை தெரிவித் தருளியதும் தெய்வத் தமிழ் மொழியே.

இனி, குகப்பிரமமாகிய குமாரமூர்த்தி, அகஸ் திய முனிவராதி பரிபாக சிஷ்யர்களுக்கு, வேதாக மாதி விசேட நூல் விரித்துணர்த்தி, அவற்றின் உண்மை விளக்கியருளிய குருநாதராயிருந்தும் தமிழ் மொழி முற்சங்கத் தலைவரா யிருந்து வளர்த்து வந்ததும் பிற்சங்கத்திலும் "இறையனாரகப்பொருள் நூலின் பல்லுரைகளின் தராதரம் விளக்கி அச்சங் கத்தவர் கலகந் தீர்த்தருளியது மிக்கனி தமிழ் மொழியே,

சிவபிரான், பார்வதி தேவியாரை மணந் தருளும் பொருட்டு இமயமலையில் சீருத்திராதியர்,

திருநந்தியாதியர் தேவர் முனிவராதிய யாவருஞ் சூழ வந்திருந்த சமயத்தில், வட திசை தாழ்ந்தும் தென்றிசை உயர்ந்தும் பூமி சமநிலை தடுமாறினமையால் சகல சனங்களும் வருந்துதல் நோக்கி, அப்பூமியைச் சமநிலை செய்யக் கருதி, அரிபிரமாதியரெல்லாம் அங்கிருப்பவும், அவர்கள் அதற்குரிய தகுதியரல்லரென்று ஒதுக்கிவிட்டு, அகஸ்தியரை அழைத்து, அப்பனே நீ நம்மை யொப்பாய், உன் பத்தினி நமது சத்தியை ஒப்பாள்; ஆதலால் நீ தென் திசையிலிருந்தால் பூமி சம நிலை பெறும், அவ்வாறு செய்க வென்றருளினர். அகஸ்தியர் வணங்கி, எம்பெருமானே தென்றிசையிலுள்ளார் தமிழ் மொழி வல்லார்; அவர்கள் கேள்விக்கு விடை கூறல் வேண்டும். ஆதலால் அடியேனுக்கு அத்தமிழிலக்கணம் தெரிவித்தருளுகவென்று வேண்டி, உபதேசிக்கப்பெற்றுத் தென்றிசையிற் பொதியமலையில் வந்திருந்தனர். பூமி சமநிலை பெற்றது. இதனால் இத்தமிழ் மொழி பார்வதி பரமேசுவரர் திருக்கல்யாணத்துக்கு முன்னரே யுள்ளதென்பது விளக்கமாம். இவ்விளக்கத்தால் சிருட்டியாரம்பத்திலேயே சிவபிரானால் நியமிக்கப்பட்ட திருவருண் மொழியே இச் செந்தமிழ் மொழியென்றது தெளிவாம். உண்மை யறியாதார் சிலர், சிவபிரான் அகஸ்தியரை நீ நம்மை ஒப்பாய் என்றது அச்சமயங் கூறிய உபசாரமெனக் கருதி அபசாரமுறுமல் வட திசையாகிய தராசுத்தட்டுக்கு நேராகத் தென்றிசையாகிய தராசுத் தட்டிலிருந்து சமநிலைகாட்டி விளக்கினமையால், அகஸ்தியர் சிவபிரானை ஒத்தவரே என்னும்

உண்மை தெளிவாம். இதனை "வைத்தலை புரட்டு முந்நீர்ப் பெள்வமுண்டவனே நம்மை, ஒத்தவன் னையான் வாழ்க்கைக் குரியாளாகிய வுலோபா முத்திரை யிம்வான் பெற்ற முகிழ்முலைக் கொடி யொப்பாள் என்றத் திருமுனிவை நோக்கி யாயிடை விடுத்தா னன்றே; விடைக் கொடு போவா னென்றை வேண்டினு னகுந்தேய நந் தொடைபெறு தமிழ் நாடென்று செல்லுப் வந்த நாட்டின், இடையயின் மனித்த செல்லா மின்றமி மாய்ந்து கேள்வி, உடையவரென்ப் கேட்டார்க் குத்தா முரைத்தல் வேண்டும்; "சித்தமாசகல வந்தச் செந் தமிழியனூல் தன்னை, அத்தனே யருளிச் செய்தி யென்றன னனையான் றேற, வைத் தனை முதனூ றன்னை மற்றது தெளிந்த பின்னும் நித்தனே யடியே னென்று நின்னடி காண்பே னென்றான்". என்னுந் திருவிளையாடற் புராணத் திருவிருத்தங்களாற் காண்க.

இப்பெருஞ் சிறப்பு வாய்ந்த அகஸ்திய முனிவர் பற்பல இலக்கிய நூல்களும் அகஸ்திய மென்னும் இலக்கண நூலும் செய்து வளர்த்து வந்ததும் வண்டமிழ் மொழியே.

இவர் மாணக்கர் தொல்காப்பிய முனிவர், ஐந்திலக்கண அரும்பெரு நூல்கள் செய்து உலகோ பகாரமாக நிலவுற வைத்ததும் நின்ற தமிழ் மொழியே;

மற்றைய மாணக்கர் பற்பலரும் நற்பெரு நூல்கள் செய்து பொற்புறப் பேணியதும் அற்புத நிலைய அருந்தமிழ் மொழியே.

இம் மாணுக்கருள் ஒருவராகிய கடவுண் மா முனிவர், தமது ஆசிரியராகிய அகஸ்திய முனிவர் திருமுன்னிருந்த ஒரு சமயம், அவ்வகஸ்திய முனிவ ரானவர் ஸ்ரீமந் மாணிக்கவாசகப் பெருமான் சிற்ச பேசாது குஞ்சித கமல செஞ்சரணில் நெஞ்சுரு கன்பிஞே டுஞ்செலு நிலை தெரிந்து, இரு கரங்களுஞ் சிரமேற்குவிய, விழிகணீர் பொழியத், திசை நோக்கி வணங்கி, அரகர மகாதேவ நாமகோஷஞ் செய்து, ஆனந்த பரவசராய் நிற்பது கண்டு அவரை வணங்கி எய்பெருமானே ஸ்ரீதவரீர் இப் பொழுது இவ்வாறு செய்த தென்னென்று கேட்ப அகஸ்திய முனிவர் மணிவாசகப் பெருமான் சிதம் பரத்தில் சிற்சபேசர் திருவடி யடைந்தது தெரிந்து வணங்கினேம் என்று கூறியருள, எம்பெருமானே அம்மணிவாசகர் தேவரீராலும் வணங்கத் தக்க வரோ வென்று கூறினர். உடனே அவர் வாயினின் றும் புழுக்கள் சொரிந்தன. அதுகண்டு அகஸ்தி யரைப் பன்முறை பணிந்து உண்மை யறியாத பாவியேன் பிழை பொறுத்தருள்கவென்று வேண்ட நீ நமது மணிவாசகப்பெருமானை வணங்கி மெய்யன் புடன் அவர் மகிமையைப்பாடிஞல் வாயிற் புழுக்கள் சொரிதல் மாறப் பெற்றின் புறுவாயென்றருள அக் கடவுண்மா முனிவர் அவ்வாறே அவ்வாதவூரர் புராணம் பாடி அத் துன்பம் நீங்கி இன்புறச் செய் ததும் இயற்றமிழ் மொழியே.

பேராசிரியர் திருச்சிற்றம்பலத் திருக்கோவையார் முதலிய நூல்களின் பொருள் விளக்கிப் பேருரை தந்ததும் பெருநீ தமிழ் மொழியே. இளம்பூரணர் தொல்காப்பிய முதலிய நூல்களின் உரை விரித்

தருளியதும் ஒண்டமிழ் மொழியே சேனு வரையர் தொல்காப்பியச் சொல் லதிகாரத்தின் உரை முதலி யன தந்ததும் ஒளிர் தமிழ் மொழியே.

நச்சினுர்க் கினியர் தொல்காப்பிய முதலிய பற்பல நூலுரை செப்பி வளர்த்ததும் திருத்தமிழ் மொழியே.

ஸ்ரீ ஞானசம்பந்தர் பதினுருயிரந் திருப்பதிக மாகிய ஓரிலக்கத் தறுபதினுயிரந் திருப்பாடல்கள் பாடியருளிச் சிவபெருமானைப் போலவே இளைய குமாராகிய தாமும் தமிழ் மொழியில் அதி விருப் பின ரென்பதும் தமிழ் மிகச் சிறந்த தென்பதும் விளங்க ஒரு நெறியமனம் வைத்துணர் ஞானசம் பந்தன் னுரைசெய்த திருநெறியதமிழ் வல்லவர் தொல்வினை தீர்தல் லெளிதாமே என்பது முதலிய பற்பல அற்புத வாக்கியங்களால் விளக்கி யருளிய தும் விழை தமிழ் மொழியே.

திருக்கயிலையில் வீற்றிருந்தருளிச் சிவாஞ் ஞையாற் றென்றிசைக்கு வந்தருளிய ஸ்ரீ வாகீச முனிவராகிய திருநாவுக்கரசர் நாற்பத்தொன்ப தாயிரந திருப்பதிக மாகிய நான்கிலக்கத்துத் தொண்ணூருயிரந் திருப்பாடல்கள் பாடியருளி அவற்றுள்ளே பற்பல்லிடங்களில் ஆரியமுஞ் செந் தமிழு மானுன்கண்டாய் என்பது முதலிய அற்புத வாக்கியங்களால் வடமொழியினுஞ் சிறந்ததென்று திடமுற விளக்கியதும் தீந்தமிழ் மொழியே. ஞான சம்பந்தர், தம்மைச், சகலசீவரையும் அடிமைகளாக வைத்தாளுகின்ற பசுபதியாகிய பரமசிவ குமாரரே என்னும் உண்மை கண்டு வழிபாடு செய்து உல

கெலாம் உய்க வெனத் திருவுளங் கொண்டே, பாலை விரும்பி அழுதலே பாலர்களியல்பாயிருக்கவும், தாம் சிவபாதவிருதயர் பகவதியாரிருவருக்கும் புதல்வ ரென வத்தருளிய பாலப் பருவமுறைக் கிணங்கப், பாலை விரும்பி அவ்விருவரை நோக்கி அம்மே அப்பா வென்றழைப்ப தொழிந்து, தமது நித்திய மாதா பிதாக்களாகிய பார்வதி பரமேசுரர்களையே நோக்கி, வேதநெறி தழைத் தோங்குதலையும் மிகுசைவத் துறை விளங்குதலையும், பூதபரம்பரை பொலிதலை யுமே விரும்பிச் செம்மேனி வெண்ணீற்றர் திருத் தோணிச் சிகரம் பார்த் தம்மே யப்பா வென்றென்ற ழைத்தருளி யழுதருளியது தழைத்த திருத்தமிழ் மொழியே, அம்மேயப்பா வென்றழைத் தருளிய உறவுமுறை பற்றியும் சிவகுமாரரே என்பது தேற்ற மாம். ஞானசம்பந்தர் தமது சார்பிலுல் அதி தீவிர தரபரிபாக நிலை பெற்ற சிவபாதவிருதயர்க்கு, அரி பிரமாதிதேவர் முனிவர் யாவர்க்கும் எட்டாத தத்து வாதீத நிலைய சிவபிரானை உமா தேவியாருடன் இடபாரூடராய் அணிமையில் வந்தருளும்படி என் னுள்ளங் கவர்கள்வனுகிய பீடுடைய பிரமாபுர மேவிய பெம்மானிவன் அன்றே என்று விளக்கி நேரே தெரிசிப்பித்தருளியது தெளிதமிழ்மொழியே.

ஞான சம்பந்தர், என்னுள்ளங் கவர்கள்வன் என்றருளியதனுலும், தேவாரங்கள் ஆரியவேத சாரமாய் ஆங்காங்குள்ள குறிப்புப் பொருள்களும் விளங்க வைத்தருளிய சீரிய தமிழ் வேதமென்பது தெளிவாம். இதனைப் பின்வரும் விளக்கத்தாற் காண்க. இருக்கு யசுர் சாமம் அதர்வணம் என்னும்

வேதங்களாகிய புருஷ ரூபத்தில் முகமாய் விளங்கு வது யசுர் வேதம். இம்முகத்தில் கண்ணுய் விளங்குவது இவ்வேத மத்தியில் ஸ்ரீருத்திரம். இக் கண்ணில் மணியாய் விளங்குவது இவ்ருத்திர மத்தியிலுள்ள ஸ்ரீ பஞ்சாக்ஷரம் இம்மணியிற் பாவையாய் விளங்குவது இப்பஞ்சாக்ஷர மத்தியி லுள்ள சிவ என்னும் இரண்டக்ஷரம். இம் முறை சிவ சாஸ்திர விளக்கமே. இதனை வேதசாரமாகிய திருநாவுக்கரசர் தேவாரம் கண்ணே கண்ணிற் கரு மணியே மணியாடுபாவாய் என்று செவ்வே தேற்று கின்றது. இத்தகைய யசுர்வேத மத்தியிலுள்ள ஸ்ரீ ருத்ரம் தஸ்கராணும் பதேயநம. என்னும் மந் திரரூபமாகச் சிவபிரானைத் திருடர்க்கெல்லாம் தலைவ னென்று கூறியது, இம்மந்திரம் சிவபிரான் இன்ன தைத் திருடினவனென்றுகூருமல் குறிப்பாலுணர்த் தியதை, நமது ஞானசம்பந்தப் பெருவாழ்வு என் னுள்ளத்தைக் கவர்ந்த கள்வன் திருடன் என்று விளக்கியது, இதனுல் சிவபிரான் திருடுவது இது போலும் பொருள்களையே என்பது தெளிவாயது உள்ளம்முதலிய பொருள்களைச்சிவபிரான் மறைந்து நின்று கவர்தலால் அது திருட்டென்ருயது. ஆன் மாக்களுடைய மன முதலிய பந்தப் பொருள்களைக் கவர்ந்து பந்தம்நீக்கிச் சுத்தமாக்கும் செயலாதலால் இது திருவருட் செயலேயாம்.

ஞானசம்பந்தர் மானுடரூபியாய் விளங்கு தன் மாத்திரையே நோக்கி அவரது பூர்வ நிலையை உணராத சாமான்யர்கள், அவரைச் சீவர்களில் ஒரு வரென்று கூறி நரகுருமல் மானைக்காட்டி மானைப்

பிடித்தல்போல மனிதரை வசித்துய்வித்தற்காகவே மனிதரூபியாய் வந்த சிவகுமாரரே யென்னும் உண் மையைத், திருத்தாளம் திருக்காத்தில் எப்போது மிருந்து விளங்குதலாலும் செவ்வே தெளிந்து சிவ குமாரரென்றே உள்ளபடிகருதி வழிபாடு செய்துய்க எனத் திருவுளங்கொண்டே, திருத்தோணித் திருக் கைலாச பதியாகிய சிவபிரான் தமது தர்ம பத்தினி யாருடன் தீர்த்தக்கரையில் வந்தருளி நேரே திரு முலைப்பாலூட்டித் தமது குமாரரே என்பது விளக்கி யருளிய அம்மட்டிலமையாமல், பிதாவின் சொத்துப் பிள்ளைக்குரியது என்னும் முறைமையில் தமது பஞ் சாக்ஷர விலாசம் எழுதிய திருத்தாளங்களை நமது இளங் குழந்தையின் மென்கரம் வருந்துமே என்று பரிந்து தந்தருளப் புரிந்தது திருந்து தமிழ் மொழியே.

ஞான சம்பந்தர் பற்பல அற்புதச் செயல்கள் நிகழச் சிதம்பரம் முதலிய இதப்புரி தலங்கள் சென்று பணிந்து பாடி மீண்டு வந்த பின் சிவபாத விருதயர் முதலியோர் வேண்டுகோட் கிணங்கி உப நயனச் சடங்கு மேற்கொண்டு, உலகர் முறைப்படி காயத்ரி மந்திரம் உபதேசிக்கப்பெற்று, வேதாத்தி யயனம் செய்யத் தொடங்கி அது செய்விக்கும் உபாத்தியாயர் முதலிய பலரும், முன்னுள்ள சந்தே கங்கள் முழுது நீங்கித், தம்மையே பரமசிவமாகிய தியானப் பொருளாகக் கொண்டு தியானத்திருந்து கேட்டு இன்புறும்படி, வேதப்பொருளை விரித்தெடுத் தோதியருளி, அவ்வேதத்துள் உயிராய் விளங்கும் சீவரத்னமாகிய ஸ்ரீ பஞ்சாக்ஷரமே, ஆரிய வேதமும்

அதன் சாரமாகிய சீரிய தமிழ் வேதமுமாகிய இரு வகை வேதங்களையுடைய நால்வகைச் சாதி வேதியர்க்கு, முடிவில் முடிவிலாப் பேரின்பமருளும் திவ்ய மந்திரமெனறு விளக்குகின்ற வேதியர்க், கந்தியுண் மந்திர மஞ்செழுத்துமே என்றருளியது மன்றலந் தமிழ் மொழியே.

திருப்பாச்சிலாச்சிராமத்தில், கொல்லிமழவன், மணிமந்திர மருந்து முதலிய எவ்வகையினும் நீங்காமல் வருந்துகின்ற தன் மகள் முயலகனோயை மாற்றியருளும்படி, சிவசந்நிதியடைந்து பணிந்து வேண்டவும், பரம கருணாநிதியாகிய சிவபெருமான் அப்பெண் வினை வயத்தால் வந்த அத் துன்புற வேண்டிய கால வெல்லை நோக்கி, அந் நோயை நீக்கியருளாது இருப்பது கண்டும், அங்கு வந்தருளிய ஞானசம்பந்தர், தமது சந்நிதி விசேடத்தால் எவ்வித வல் வினையும் உடனே நீங்குமென்னும் உண்மை கண்டு, உலகெலாம் தம்மை வழிபாடு செய்துய்யும்படி அந் நோயை அப்பொழுதே தீர்த்தருளியது சீர்த்தமிழ் மொழியே.

ஞானசம்பந்தர், திருச் செங்குன்றூரில், தமது தொண்டரைப் பனி மிகுதியால் குளிர் சுர நோய் பிடித்தது தெரிந்து, அந் நோய் அந் நாடெங்குமில்லாது ஒழியும்படி, பாடியருளியது பசுந்தமிழ் மொழியே.

இதனால் ஞானசம்பந்தர் தம்மையடுத்த பதினாருயிரந திருத்தொண்டர் முதலிய யாவரையும் காலதேச வசத்தாலும் எவ்வித இடரும் சாராமல்

பாதுகாத்து வருதல் விளக்கமாம். இதனைச் சம்பந்தர் திருப்பழையாறை மேற்றளியிலிருந்து திருச்சத்திமுற்றத்து வரும்பேது, சூழ்ந்து நடந்து வருகின்ற திருத்தொண்டர்கள் வெய்யில் வெப்பத்தால் வருந்துவரேல், அதனைச் சம்பந்தர் சகிக்கமாட்டாரென்னுந் திருவுள்ளத்தால், திருப்பட்டீசுரர் முத்துப்பந்தர் கொடுத்தருளியதனுலும் தெளியலாம் அப்பந்தர் பூமியில் நடக்காமல் பல்லக்கில் வருகின்ற சம்பந்தருக் கவசியமன் ருதலால், நடந்து வருந் திருத்தெண்டர்க்கு நிழல்விரியும் பொருட்டே வேரில் விட்ட நீரால், மரத்தின் கிளை தளிர் முதலிய வெல்லாந் தழைக்குமியல்பு போல, அத்தொண்டர்க்குத் தலைவராகிய சம்பந்தர் பல்லக்கின் மேல் நிழற்றும்படி கொடுத்தருளினுர். இதனுலும் சம்பந்தரது சருவ வியாபக சொருப நிலை விளக்கமாம்.

ஞான சம்பந்தர், சிவபாத விருதயர் முதலிய பிராமணர்கள் சிவயாகாதி சிவ தருமங்கள் செய்து சிவனருள் பெற்றுய்யும் பொருட்டுத் திருவாவடுதுறையில் எடுக்க எடுக்கக் குறையாத ஆயிரம் பொன் நிறைந்த உலவாக் கிழி பெறப் பாடியருளியது, நீடு தமிழ் மொழியே.

ஞான சம்பந்தர் தருமபுரத்தில் கந்தர்வ வேத முதலிய சங்கித நூல்களெல்லாவற்றையும் தன்னுள்ளடக்கிக் கொண்டு தான் ஒன்றினுமடங்காத அதீதமாய் விளங்குந் திருவருள் மயமாகிய இன்னிசைத் திருப்பதிகம் பாடியருளியது விருப்பதிகத் தமிழ் மொழியே.

ஞான சப்பந்தர் திரு மருகலில் மணி மந்திர மருந்து முதலிய எவ்விதத்திலும் நீங்காது மேலெழுந்த விஷத்தாலிறந்த வணிகன் மறுதினம் தமது திருப்பதிகத் திருமந்திரத் திருவமுதப் பெருக்கிலோர் சிறு துளி பட்டவுடனே உயிர் பெற்றெழுந்து மணம் புரிந்தின்புற்று வாழ்வுறச் செய்ததும் ஏழிசைத் தமிழ் மொழியே.

இவ்வாறே திருப்புறம்பயத்திலும் அருட் பெருஞ் செயலினோர் வணிகன் உயிர் பெற்றுய்யும் அணிநலந் தந்தது கனி தமிழ் மொழியே.

ஞானசம்பந்தர் தமக்கும் அப்பருக்கும் திருவீழியீசர் இப் பஞ்ச காலத்தில் உணவின்மையால் உங்களிருவர் மேனிகளுக் கூனமில்லை, யென்றருளி அதனால் இருவர் மேனிகளும் மனிதர் வடிவம் போற் காணப்படினும் அவ்வடிவங்கள் மனிதர்கட்கு அவரவர் வினைகட்குத் தக்க ரத்த மாமிசாதிகளால் ஆக்கப்பட்டு வருகின்ற மாயா சரீரம் போல்வன வல்ல, திருவருண்மயமாகிய ஞான வடிவங்களே என்னு முண்மை விளங்க வைத்துக் கொடுத்தருளிய பொற் படிக்காசு பெற்றுத் தமது பதினாறுயிரந் தொண்டர்களுக்கும் மேலும் பல்லாயிரம் தொண்டர் களுக்கும் அறுசுவை யுணவளித்து வந்து அக்காசு வாசி தீரப் பாடியருளியது, தேசு கூறுந் திருத் தமிழ் மொழியே.

ஞானசம்பந்தர் அப்பருடன் வேதாரணியஞ் சென்ற போது வேதாரணியேசுவரர் திருச்சந்நிதித் திருக் கதவு வேத புருஷர்களால் திருக்காப்புச் செய்த முத்திரை வைக்கப் பெற்றமையால் அரி பிர

மாதி தேவர் மனிதர் யாவராலும் அவ்வாணை கடந்துட் புகப் பெருமல் வேறு பக்கத்தில் ஒரு வாயில் அமைத்து அவ்வழியால் திருச் சந்நிதி யடைந்து தெரிசித்து வருதலே நெடுங்கால வழக்கமா யிருப்ப தறிந்தும் அப்பரே நாம் வேதாரணியேசர் திருச் சந்நிதித் திருக்கதவு திறந்தே உட்சென்று தெரிசிக்க வேண்டும்.

தேவரீர் திருக்கதவு திறக்கப் பாடியருளுகவென வேண்டி அவ்வாறே அப்பர் திருப் பாடல்களாற் றிறக்கப்பட்ட அவ்வழியே உட்சென்று தெரிசித்து வந்து பின்னர் அப்பர் வேண்டியபடி அத்திருக் கதவுகள் தாமாகவே திருக்காப்புறச் செய்தது அருட் காதலருந் தமிழ் மொழியே.

ஞானசம்பந்தர் அரி பிரமாதியராலுங் கடக்க முடியாத வேதங்களின் ஆணை வலியையும் ஒரு பொருட்படுத்தாது நேர் வழியில் செல்லக் கருதியதனுல் இவர் அரி பிரமாதி தேவர் முதலிய சீவர் யாவரையும் அடிமைகளாக வைத்தாளுகின்ற பசுபதியாகிய பரமசிவ வல்லபம் முழுதுமுள்ள குமாரரே என்பதும் அப்பரைத் திருக்கதவு திறக்கப் பாடியருளுக வென்று வேண்டியமையால் அப்பரும் அவ்வல்லபம் முழுதும் நிறைந்து சிவதுல்லியராய் விளங்கும் வாகீச முனிவரே யென்பதும் விளங்கும். வேதங்கள் சிவபிரான் அருளியவாக்கியங்களை விளக்குகின்ற அவ்வளவினவேயாம். ஞான சம்பந்தர் முதலிய ஒருமைத் தொண்டர்கள் சிவபிரானைப் போலவே அருட்செயல்களையும் செய்ய வல்லவர்களென்பதும் இத்தொண்டர்களுக்கும் அவ்வேதங்களுக்கும் உள்ள தராதரம் மிகப்பெரிதென்பதும் விளக்கமாம் இதனை,

" திருமறை நம்பர் தாமுன் பருள்செய்த
வதனைச் செப்பும்
ஒருமையில் நின்ற தொண்டர் தம்பிரா ஞர்பா
லொக்க
வருமருட் செய்கை தாமே வகுத்திட வல்ல
ரென்றல்
பெருமறை யுடன்மெய்த் தொண்டர்க்
கிடையிடு பெரிதா மன்றே".

என்னும் ஞானசம்பந்தர் புராணத் திருவிருத்தத் தாற் செவ்வே காணலாம். வடமொழி வேதம் பூட்டி வைத்த ஆணையைக் கடந்து தென் மொழி வேதம் திறந்ததனாலும் வட மொழியினுஞ் சிறந் தது தென் மொழியென்பது செவ்வே தெளிவாம்.

ஞான சம்பந்தர், உலகெலாம் சைவத் திரு நெறி நின்றுய்வைப் பெறுக வெனும் தெய்வத் திறலன்பே மெய் பெற்று வந்தருளிய மங்கையர்க் கரசியார் குலச்சிறையார் இருவர் வேண்டுகோட் கிணங்கி மதுராபுரியில் வரும்போதே அவ்விருவர் பேரன்பை வியந்து பாடியது உயர்ந்த தமிழ் மொழியே.

ஞானசம்பந்தர். சமணர் செய்த தீத்தொழில் அரசனால் வந்ததாதலால் அவ்வபசார நீக்க முதலிய பற்பல திருவுளக் குறிப்போடு, அவன் சமணரைச் சார்ந்து நின்ற அநாசார தோஷ முதலிய அசுத்த னாயிருத்தலால் முதலில் அவ்வசுத்தம் நீங்கிய பின்னரே அவனையடுத்து இருவரும் வேண்டியபடி அவனுக்கு அருள வேண்டு மென்னுங் கருத்தால் எவ்வித அசுத்தங்களையும் நீக்கிச் சுத்தமாக்கும் இயல்பினுற்சுசிஎன்னும் பெயருடைய அக்கினியைச்

சுர நோயாகச் சென்று சுத்தி செய்யும்படி "வெய்ய ராமம ணர்கொளு வுஞ்சுடர், பையவே சென்று பாண்டியற் காகவே" என்று பாடியதும் இருந் தமிழ் மொழியே.

ஞானசம்பந்தர், சிவபிரானைப் போலவே, திரு வருட் பெருஞ் செயலெல்லாந் தாமே செய்ய வல்ல வராயிருந்தும உலகர் எச்செயலுந் திருவருளை வேண்டி நின்று செய்தாற்றான், அவ்வக்காரிய சித்தி பெற்றுய்யலாமென்பது காட்டுவாராய்த் திரு வாலவாயுடையார் திருச்சந்நிதி யடைந்து, எம் பெருமானே: சமணரோடு வாது செய்யவும், வாதில் வென்றழிக்கவும் தேவரீர்க்குத் திருவுளக்கருத் துண்டோ வென்று வேண்டிக் கொள்ளுந் திருப் பதிகங்கள் பாடியது அருட் பொதியுந் தமிழ் மொழியே.

ஞானசம்பந்தர், பாண்டியன் முன் வந்தபோது அவன் மீது திருக்கண்ணோக்க முற்றது சட்சு தீக்ஷை யும் அவன் தலைப்பக்கத்தில் உயர்ந்த பீடத்தில் பாதத்தைக் கீழ் நீட்டிச் சுகாசனராய் வீற்றிருந் தருளியது திருவடி தீட்சையும் அவன் மேனியைத் தீண்டித் திருநீறு பூசியதுஸ்பரிச தீட்சையுமாய்த் திருநீற்றுத் திருப்பதிகம் பாடி வாசக தீட்சை செய்து தேசகமிலகிப் பாசவலி விலக்கியது நேச பெய்த் தமிழ் மொழியே.

ஞானசம்பந்தர், பாண்டியன் முன்பு வளர்த்தெழு கின்ற பெரு நெருப்பிற் சமண குருமார் எண்ணுயிர வரும் அவரவர் சீடர்களும் "அஸ்திநாஸ்தி" என்பன முதலியவாக எழுதியிட்ட பல்லாயிரம் ஏடுகளும்

சாம்பரா யொழிந்த பின்பு அக்கினி கர்ப்ப குகாவ தார மூர்த்தியாகிய தமது திருக்கரத்தால் அப்பெரு நெருப்பில் சேர்த்தருளிய திருவேடு முன்னிலும் பசுமையாய்த் திகழ அதனைத் தாமே எடுத்தருளி யாவர்க்கு மேலெடுத்துக்காட்டிச் சைவசமயமே சற் சமய மென்று விளக்கி யருளியது மெய்த் தமிழ் மொழியே.

ஞானசம்பந்தர், சமண்சார்பொழிந்து பாசவலி நீக்கிப் பசு போதமகன்று தம்மையேபற்றி நிற்கும் பாண்டியனது அதி தீவிர தர பரிபாக விசேடத்தாற் சிவத்துவப் பேறுதரும் சிவாகமத்துள்ள சிவஞான போதத் தெளிபொருள் விளக்கியருளும் திருப்பதி கம்பாடி யருளி, அதனையிருகரையுமமோதி அதி வேகமாகச் செல்லும இயல்பை "வேகவதி" என்னும் பெயராலும் விளக்குகின்ற வைகையாற்றில் விட் டருளியவுடனே, அந்நதி வேகத்திலும் அதிவேக மாக அப் பெரு வெள்ளத்தை யெதிர் கிழித்துச் சென்று எம் மதத்தரும் சிவனொருவனே பரமபதி யென்னும் உண்மை தெளிந்து உய்ய விளக்கியது தெய்வத் தமிழ் மொழியே.

ஞானசம்பந்தர், திருநெல்வேலிக்கு வந்தது தெரிந்த அகஸ்திய முனிவர் அங்குவந்து அவரைப் பணிந்து அநுமதி பெற்று அவர் சந்நிதியிலிருக் கும் அவர்பாடிய அத்தலத்துத் திருப்பதிகத்துள்ள செழும் பொருள் விரித் தெடுத்துரைத்து அதன் முகமாக முன்னர் அங்கு வைஷ்ணவர்கள் சைவ நெறிக்கு இடர் செய்து வந்த கொடுமை மாற்றி, வைஷ்ணவாதி சமயங்க ளெல்லாவற்றையும், தனக் குக் கீழ்ப்படி வரிசையாகிய அங்கங்களாகக்

கொண்டு தான் அவற்றிற்கெல்லாம் மேலாய் அங்கியாய் விளங்குவது சைவசமயம் ஒன்றே என்னும் உண்மையே, வேதவேதாந்தாதி சாஸ்திரப் பிரமாணங்கள் காட்டி விளக்கி யருள, அவ் வைஷ்ணவர்களெல்லாரும் அவ்வுண்மை தெளிந்து சைவநெறிச் சார்பினர்களாய் அடங்கி வந்து சப்பந்தா திருவடிகளில் வணங்கி நின்று துதிக்க, அவர்க்கெல்லாம் விபூதி கொடுத்தருளிச் சைவராக்கி உய்வு நோக்கச் செய்தது " மருந்தவை மந்திரம் " என்று தொடங்கிய திருந்திசைச்சொல் தமிழ் மொழியே.

(இச்சரித்திரம், திருநெல்வேலிப்புராணத் துள்ளது)

ஞானசம்பந்தர், திருக்கொள்ளம் பூதூர்க்குச் செல்லும் வழியில் முள்ளியாறு அளவுகடந்து பெரு வெள்ளமாய் அதிவேகமாய்ச் செல்லுதல் கண்டும் ஓடத்தை அவிழ்த்து விட்டு அவ்ஃவாடம் ஒன்றே பதினாருயிரம் திருத்தொண்டர் முதலிய யாவர்க்கும் இடந்தந்து விரியும்படி அதனில் யாரையும் ஏறச் செய்து அவ்வோடம் யாதொரு உலைவு மின்றித் தானே செல்லும்படி பாடி யருளியது நீடிசைத் தமிழ் மொழியே.

ஞானசம்பந்தர், திருத்தெளிச்சேரி பணிந்து செல்லும் போது எதிர்வந்து தடுத்த புத்தர்கள் நிலைகுலைந்து வாதிலழிந்து உண்மை தெளிந்து யாவரும் சைவநெறியே பற்றி நின்றுய்வுறுதற்கு முதலிற் காரணமாய் எழுந்து, " வித்தக நீறணிவார் வினைப்பகைக்கத்திரமாவன வஞ்செழுத்துமே" என்றருளியது இன் சுவைத் தமிழ் மொழியே.

ஞானசம்பந்தர், திருப்பூந்துருத்தியில் அப்ப மூர்த்திகள் உழவாரப் பணிசெய்யு மிடங்களில் எச்சிற்கலே முதலிய அசுத்தஞ்செய்து மேலுஞ்சைவ நெறிக்கு இடர் பல செய்துவந்த கொடிய வைஷ்ணவர்க ளெல்லாரும் பூமி வெடிப்புள்ளே வீழ்ந்து சேஷமில்லா தொழியப் பாடியருளியது பீடுயர் தமிழ் மொழியே

ஞானசம்பந்தர், திருவோத்தூரில் சமணரிகழ்தல் நோக்கி வருந்திய ஒருமெய்யன்பர் பொருட்டு ஆண் பனைகளெல்லாம் பெண்பனைகளாய் உடனே பூத்துக் காய்க்கும்படி பாடியருளியது பீடுடைத் தமிழ் மொழியே.

ஞானசம்பந்தர், திருக் காஞ்சிப் பதியிலுள்ள திருமேற்றளியில் ஏகாம்பர நாதர் ஆணையின்படி ஞானசம்பந்த நன்மந்திர ஜெப தியான நிலைநின்று தமது திருவெழுச்சி நோக்கியே தவஞ்செய்திருந்த திருமாலுக்கு எதிர் வந்தருளி, அம்மால் தம்மைப் பணிந்து துதித்து வேண்டிக்கொண்டபடி சிவ சாரூபங் கொடுத்துச் சிவலோகஞ் சேர்த்தருளி மேற்றளி யீசனைப் பாடியருளியது தேற்று தமிழ் மொழியே.

ஞானசம்பந்தர், திருவாலங்காடு சமீபிக்கவந்து நமது பாட்டியார் தலையால் நடந்து வந்த தல மன்றோ இது வெனப்பரிந்து உட்செல்லாமல் பக்கத் தொதுங்கிச் சென்று ஓரிடத்தில் பள்ளி கொண்டருளவும் அவர் பாட்டில் வைத்த ஆசை மிகுதியால் சிவபிரான் வலிந்துவந்து நம்மைமறந்தனையே வென்றருளிய பின்னும் பாட்டியார் மேல் வைத்த

பேரன்பின் உறுதிப்பாட்டினால் அங்கிருந்தே பாடி யருளியது பொங்கிருந் தமிழ் மொழியே,

ஞானசம்பந்தரது தெய்வத்திற னமைந்துய்வைத் தரும் பெரு மகிமை தெரிந்து உரிமை யன்பு மிகுந்த திருமயிலாப்பூர் சிவநேசச் செட்டியார் தமது பெறற்கரும் புத்திரியாராகிய பூம்பாவை யாரையும் தமது பொருளையும் ஞானசம்பந்த சிவார்ப்பணஞ் செய்து அவர் வந்தபின் அவரிடம் ஒப்புவிக்கக் கருதிப் பாதுகாத்து வந்தனர், அப் பூம் பாவையார்க்குப் பிரம சிருஷ்டியில் வந்த மாயாமய சரீரத்தை மாற்றி ஞானசம்பந்த சிருஷ்டியில் ஞானமய சரீரங் கொடுப்பித்து அதன் மேல் ஞான சம்பந்தரை அடுத்துப் பணிந்து அவரருள் பெற் றுய்க வெனக் கருதிய திருவருள் வசத்தால் அப்பூம் பாவையாரது உயிர் நீங்கிய உடலை விதிப்படி தகித்து அவ்வெலும்பு சாம்பரைப் பொற் குடத்தி லமைத்து வைத்துப் பூசித்து வந்தனர். நெடு நாளானபின் சம்பந்தர் திருவொற்றியூரிலிருந்து திருமயிலாப்பூருக்கு வருஞ்சமயந் தெரிந்து திரு வொற்றியூர் வரை நடைப்பந்தர் பாவாடை வாழை கரும்பு முதலிய அலங்கார வகையெல்லாஞ் செய்து மங்கல வரிசைகள் பொலிய எதிர் சென்று பன்முறை பணிந்து அன்பு பெருக அஞ்சலி யஸ் தராய் அணுகி வர ஞானசம்பந்தர் திருமயிலாப் பூருக்கு வந்து திருக் கபாலீசர் திருக் கோயிலிற் புகுந்து திருச்சந்நிதியிற் பணிந்தெழுந்து சிவ நேசச்செட்டியார் எலும்பு சாம்பர் அமைந்த குடத் தை நித்திய பூசை செய்து வருதலை அடுத்தவர்

களால் முன்னரே தெரிந்தவுடனே அப்பூம்பாவை உயிர்பெற்று வந்துய்யச் செய்தலே நிச்சயமாகக் கொண்டமையால் அக் குடத்தில் எலும்பு சாம்பர் இருப்பதாகவும் அநாசார மென்றுங் கருதாமல் பூம் பாவையார் இருப்பதாகவே கருதி அக் குடத்தைத் திருக்கோயில் முன் கொண்டுவரும்படி ஆஞ்ஞா பித்தனர். சிவநேசரும் முன்னரே சம்பந்தரது துய பொருளெனக் கருதிப் பூசித்து வந்தவராதலால் அக் குடத்தைத் திருக்கோயில் முன் வைத்தனர். சம்பந் தர் தாம் திருவுளங் கொண்டருளியபடியே பூம்பா வாய் வருக வென்றழைத்தருளுந் திருவாக் கமுதம் பொழிந்து அருள் மேற்கொள் ஞானமய உருவாக்கி வெளிவரச் செய்தது பொருவாக்கனி தமிழ்ப் புனித நன் மொழியே.

ஞானசம்பந்தர், தாம் சிவாஞ்ஞையின்படி பூமி யில் வந்தருளிச் சமண் பௌத்தம் வைஷ்ணவம் முதலிய அந்நிய சமயக் கொடுமை நீக்கிச் சைவ சமயப் பெருமை விளக்கிச் சைவஸ்தாபனம் செய்து பற்பலமெய்யன்பருக்கு அங்கங்கே அருள்புரிந்து முடிவில் வரையறையின்றிப் பல்லாயிரவர்களைத் தமது திருவருட் பெருவெள்ளந் தோய்விததுப் பரி சுத்தர்களாக்கிப் பரமசிவ நாயகரை மணந்து பேரின்புற்று வாழும் பெருமண மெய்தி யுய்விக்சத் திருவுளங் கொண்டு அதற்குரிய பேரருட் சிறப் பினது திருப் பெருமண நல்லூரே எனத் துணிந்து தமது திருவவதாரப் பொருவருஞ் சீர்த்தி மருவு சீகாழி ஒருவரும் பதியையும் விட்டு நீங்கித் தாம் ஒரு பெண்ணை மணம்புரியச் செல்வதாகிய ஒரு வியாசங் காட்டி அக்காதலியார் (பிரியை) கைப

பற்றித் திருக்கோயிலிற் சென்று தமது திருவுளக் கருத்து விளங்கக் கல்லூர்ப் பெருமணம் வேண்டா—நல்லூர்ப் பெருமண மேய நம்பானே", என்று சிவமணப் பதிகம் பாடியருளியது தவமணத் தமிழ் மொழியே

ஞானசம்பந்தர், அதன் பின்னர் தமது கருத்தின் படி யாவருஞ் சிவதாயகணை மணத்தற்கு இன்றி யமையாதது அக்கினிப் பிழம்பே என்று கொள்ளும் படி திருவெண்ணீற்றுமை யம்பா சமேத சிவலோ கத்தியாகேசர் திருவருளால் எழுந்த பெருஞ் சோதியாகிய சிவபத நிழலில் யாவரையுஞ் சேர்த் தற்குரிய அதி தீவிரதர பரிபாக சிவஞான நிலை தந் தருளி அப்பெருஞ் சோதியிற் சேர்த்தருள்வாராய்ச் சிவ தீக்ஷா விசேடத் திருவைந்தெழுத்தோசை அப் பல்லாயிரவர் செவிகளிலும் பொருந்தும்படி பெருந் தொனி செய்து பாடியருளியது

காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி
யோதுவார் தமை நன்னெறிக் குய்ப்பது
வேத நான்கினு மெய்ப் பொருளாவது
நாத நாம நமச்சி வாயவே.

என்னும் போதவாசகப் புனை தமிழ் மொழியே.

திருநாவுக்கரசர் மலரகித சீவன் முத்த நிலை யிற் சிவதுல்லியராய்த் திருக்கயிலையில் வீற்றிருந் தருளிய வாகீச முனிவர். இவரைக் கொண்டு சிவ பிரான் பூமியில் அந்நிய சமய நிராகரணமுஞ் சைவ சமய ஸ்தாபனமுஞ் செய்விப்பத் திருவுளங் கொண்டு, இவர் இராவணனுக்குச் செய்த உபகா ரத்தை ஒரு குற்றமென்று காட்டி மனித ரூபராய்ப்

பூமிக்கு வரும்படி கூறி அங்கும் நாம் உனக்கு வந்தருள்வோ மென்று ஆஞ்ஞாபித்தருளினர். இதனுல் எவராஞலும் வேடமுதலியன வெளிக் காட்டி உலகரை வஞ்சிக்கும் துஷ்டருக்கு உதவி செய்தால் அது அவர்க்கும் தமக்கும் தீமையே விளைக்கு மாதலால் அவ்வஞ்சகருக்கு உதவிசெய்யப் படாது என்பது சிவாஞ்ஞையேயா மென்று தெரி விக்கின்றது. மேற்கூறியபடி சிவாஞ்ஞை சிரமேற் கொண்டு சித்தாந்த சைவத்திருமரபில் மகவுருவாய் வளர்ந்து வருந் திருநாவுக்கரசர், தமக்குச் சிவ பிரான் அங்கும் வந்தருள்வோ மென்றளியதையே எதிர்நோக்கி நிற்றலால் கால நீட்டித்தல் சகியாது ஊடி நிற்கும் குறிப்புத் தோன்றச் சமண சமயத்திற் புகுந்தனர். இதனை "நல்லாறு தெரிந்துணர்ந்தும் நம்ப ரருளாமையினுல், கொல்லாமை மறைந்துறை யுமமண்சமயங் குறுகுவார்" என்று சேக்கிழார்பெரு மான் செவ்வே விளக்கி யருளிஞர். இது, நாயகர் கள் குறித்த காலத்தில் வாராது தாமதித்தால், நாயகிகள் மெய்ப்பூச்சு முதலிய அணி வகைகள் செய்து கொள்ளாமல், என்றுமுள்ள நற்சயனத்தி னீங்கி உவர்த்தரையாதிகளில் சயனித்தல் போலும். அவ்வாறு சயனிக்கிலும் நாயகரிடத்திலுள்ள அன்பு நழுவாது அந்தரங்க வழிபாடு நிகழும். அது போலவே திருநாவுக்கரசரும் சமண்சமயம் புகுந்த பின்னும் அந்தரங்க சிவவழிபாடு மாருமலே இருந்த னர். இதனை, "இரவும் பகலும் பிரியாது வணங் குவ னெப்பொழுதும்" "நெஞ்சமுமக்கே யிடமாக வைத்தேன் நினையாதொரு போதுமிருந்தறியேன்" "வஞ்சம் மனமொன்று மிலாமையினுல் சலம்

பூவொடு துபமறந்தறியேன் தமிழோடிசை பாடன் மறந்தறியேன் நலந்தீங்கிலுமுன்னை மறந்தறியேன் எனபனவாதியாக அவரே பாடியருளிய திருவாக்கு களாலும் தெளியலாம். ஈண்டு நலந் தீங்கிலு முன்னைமறந்தறியேன், என்றது சற்சமயமாகிய சைவச்சார்பி லிருந்த போதும் தீச்சமயமாகிய சமணர் குழுவுள் இருந்த போதும், உன்னை மறந் தறியேன் என்னுங் குறிப்பையும் விளக்கும், தலை வியர் ஊடுதலும், அதனை யுணர்ந்த தலைவர்கள் தூதாகத் தக்காரை யனுப்பி அழைப்பித்துத் தழுவி இன்பந்தருதல் நோக்கியேயாம். அதுபோலத் திருநாவுக்கரசர் சமணர் குழுவுட் புகுந்திருந்த போது நாயகராகிய சிவபெருமான் தமது திருவரு ளையே சூலை நோயென அனுப்பி, விடாது நின்று அழைத்து வரும்படி செய்து திருப்பதிகத் திருவமு துண்டு, சுத்தாத்துவித நித்தியானந்த பரபோகந் தந்தமையே முடிந்த பயனாகியது காண்க.

திருநாவுக்கரசர் சமண் சமயத்திற் புகுந் திருந்து செய்தது சைவ விளக்கச் செம்மை நெறியே யாம். இதனை, திருநின்ற செம்மையே செம்மை யாக்கொண்ட திருநாவுக்கரசன்றன் அடியார்க்கு மடியேன்'' என்றருளிய திராவிட வேத தேவார சிரோன்மணியாகிய திருத்தொண்டத் தொகையும்'' நம்மையுடையவர் கழற்கீழ் நயந்த திருத்தொண் டாலே, இம்மையிலும் பிழைப்ப தென வென்போல் வாருந் தெளியச், செம்மைபுரி திருநாவுக்கரசர்'' என்றருளிய பெரியபுராணமும், "திருநாவுக்கரச ரென்னும் செம்மையாளர்" என்று உமாபதி சிவம் விளக்கி யருளிய திருமுறை கண்ட புராணமும்

செவ்வே தெளிவிக்கின்றன. பல்லவராஜன் சமணர் துர்ப்போதனையில் அகப்பட்டு அழுந்தி நிற்றலால் தாம் அச்சமண் குழாத்துட் புகுந்து ஒத்தொழுகி அவர்கள் செய்யுங் கொடுஞ் செயல்களும், அவைகள் ஒன்றேனும் பலியா தொழிதலும், நேரே காட்டி ஞல் அவ்வரசன் அச்சமணசமய துர்ப்பலந்தெரிந்து அக்கொள்கை மாறி அச்சமய நிலையழித்துச், சைவ நெறிக்கு வந்துய்வன், அரசன் சைவநிலை நின்ருல் குடிகளும் அவ்வழியே பற்றி நின்றுய்யும் இஃது அன்னிய சமய நிராகரணமும், சைவ சமய ஸ்தாபனமுமா மென்னும், தீர்க்காலோசனைத் திரு வுளக் கருத்தினுலேயே சமண் சமயம் புகுநதாரன்றி அச்சமய நிலை யறியாது புகுந்தாரல்லர். இதனை, "நல்லாறு தெரிந்துணர்ந்தும்" என்றருளிய சேக் கிழார் திருவாக்குச் செவ்வே விளக்குகின்றது. நம்பரருளாமையினுல், ஊடியது போல் காட்டியது வியாசமே. அரசனைத் திருத்தச் சென்றதே உண்மையென்பதை அவ்வரசன் திருந்திச் சமணிலை யழித்துச் சைவஞகி வந்து வணங்கி அபராதசமை வேண்டி நின்றதும் விளக்கும்.

திருநாவுக்கரசர், மேற்கூறிய படியே சமண் புகுந் திருந்து திருவருட் சூலை யழைப்ப வந்து திலகவதி யம்மையார் திருவடி வணங்கிச் சைவ்சமயப் பிரவேச முறை இஃதென்று விளக்கு வாராய் அவர் தந்தருளிய விபூதி பஞ்சாக்ஷர சிவ சாதன முறைபெற்று அவ்வம்மையாராகிய அரு ளுடன் சென்று திருவதிகை வீரட்டானேச சிவசந் நிதி யடைந்து சிவபோகந் திளைத்து அந்நிலையில் விரிந்தெழுந்த சிவானந்தாமுதப் பெருவெள்ளம்

தேக்கித் திருவாக்கின் வழியாக வெளிவந்த திருப்பதிகப் விருப்பதிகத் திருத்தமிழ் மொழியே.

திருநாவுக்கரசர் பாடியருளிய அப்பதிகங் கேட்ட சிவபிரான், அத்திருவாக்கிலுள்ள பற்பல அற்புத நயங்கள் நோக்கி அவர்க்கு முன் கயிலேயிலுள்ள வாகீச முனிவன் என்னும் வடமொழிப் பெயரை மாற்றித் திருநாவுக்கரசு என்னும் சுத்த பஞ்சாக்ஷர மகாமந்திரமே அவர்க்குப் பெயராகச் சூட்டியருளியது பாட்டிசைத் தமிழ் மொழியே.

திருநாவுக்கரசர், பின்பு அரசனுல் அனுப்பப் பட்ட மந்திரி முதலானவர்கள் திருவதிகைக்கு வந்து தம்மைப் பணிந்தழைப்ப, அவரைநோக்கி'' நாம் ஆர்க்கும் குடியல்லோம் " என்றும் ", நாம் யார்க்கும் இடைவோமல்லோம், இரு நிலத்தில் எமக்கு எதிராவாரு மில்லே, சென்று நாம் சிறு தெய்வம் சேர்வோ மல்லோம், சிவபெருமான்றிரு வடியே சேரப்பெற்ருேம். தென்றிசைக் கோன் தானே வந்து கோவாடிக் குற்றேவல் செய்கென்ருலும் குணமாகக் கொள்ளோ மெண்குணத்துள்ளோமே'' என்பன முதலிய கெம்பீர மந்திர வாக்கியங்களால் தமது சிவசொரூப நிலே தெரிய விளக்கியது அரிய வளத் தமிழ் மொழியே.

திருநாவுக்கரசர், அம்மந்திரி முதலியர், மேலும் பணிந்து மிக வருந்தியழைப்ப, அவ்வரசன் பற்பல அற்புதச் செயல்கள் நேரே தெரிந்து, சமணிலே இகந்து சைவநிலே புகுந்துய்கவெனுந் திருவுளக் கருத்தால் அவர்களுடன் சென்று, அச்சமணர் வஞ்சனேயிலகப்பட்ட அரசனுல், இடையருது பெரு

நெருப்பெரிந்து கொண்டு மேல் மூடப்பட்டுள்ள (காளவாய்) நீற்றறையுள் ஏழு நாளிருந்தும் யாதொரு ஊனமுமின்றிச் சிவபத நிழலிற் பேரின்பப் பெருவெள்ளந்திளைத்து வீற்றிருந்தருளியதைத் தெரிவித்தருளியது அருமைத் தமிழ் மொழியே.

திருநாவுக்கரசர், சமணரிடுவித்தது நஞ்சுண வென்று தெரிந்தும், அதனை யுண்டு, முன் நஞ்சை யமுதமாக உண்டருளி உலகெலாங் காத்தருளிய நம்பெருமான் அருளால் நமக்கு யாதோரிடருமுறா தென்று மொழிந்தருளியது செழுந்தமிழ்மொழியே.

திருநாவுக்கரசர், சமணரால் ஏவப்பட்டு மதம் பெருக மகாகோபத்துடன் இறுதி செய்ய வென்றே வருகின்ற யானையானது, தமது திருமுக மண்டலங் கண்டவுடனே தனது கொடுங்குண முழுது மாறி அதிசாந்தமாய் நிலமுறத் தாழ்ந்து வலஞ்செய்து பணிந்து சென்று ஏவின சமணபாதகர்களையே கொன்றொழியச் செய்தது இன்றமிழ் மொழியே.

திருநாவுக்கரசர், மேலும் அச்சமணபாதகர்கள் தம்மை மிகப் பெரிய கல்லிற் கட்டிக் கடலிற் றள்ளவும் அக்கல்லே தெப்பமாய் மிதந்து செல்ல அதன் மீது வீற்றிருந்தருளித் திருப்பதிகம் பாடிக்கொண்டு சென்று கரையேறியது உரையேறு தமிழ்மொழியே.

திருநாவுக்கரசரையே குலதெய்வமாகக் கொண்ட அப்பூதியடிகள், வேதாகமாதி சிவ சாஸ்திர முற்றுணர்ந்து சைவநெறியே உய்வை யருளும் தெய்வநெறி யென்னும் மெய்ம்மையே பற்றி மற்றெப்பற்றும் நீங்கி விதி வழி நின்று சிவமே பேணி நிற்கும் நிலையில் முக்கியசாரமா

யுள்ளது, வேத சிவாகமாதிகளால் விதந்தெடுத்தோதப்பெற்ற ஸ்ரீ வாகீச மந்திர நாமமாகிய திருநாவுக்கரசு என்னும் பிரணவ சகித பஞ்சாக்ஷர மகா மந்திர செபதியானமே என்றிறுகப்பற்றி நின்று, திருநாவுக்கரசு திருநாவுக்கரசு என்றே எங்கெங்கும் எழுதியும், தம்மக்களுக்கும் பசுக்கள் முதலியவைகளுக்கும் பெயராக அழைத்தும் அனவரத வழிபாடு செய்து வருவாராயினர். அப்போது திருநாவுக்கரசர் அவர் திருமாளிகையின் முன்பு வந்தருளக்கண்டு விரைந்து வந்து பணிந்து துதித்து எம்பெருமானே இக்குடிசையில் தேவரீர் திருவமுது செய்தருளும் பெரும்பேறு பெற்றுய்யும்படி செய்தருளுக வென்று வேண்டிக்கொண்டதற் கிணங்கித், திருவமுது கொண்டருளச் சென்ற திருநாவுக்கரசர் அவ்வப்பூதியடிகள் தமது புதல்வராகிய மூத்த திருநாவுக்கரசர் அரவால் உயிர்நீங்கியது கண்டு, வெளிப்படாமல் மறைத்து வைத்தது தெரிந்து, அப்புதல்வர் உடம்பைத்திருக் கோயிலிற் சிவசந்நிதியிற் கொண்டு வந்து வைக்கச் செய்து ஒன்றுகொலாம் என்று தொடங்கி, லாம் என்னும் பீஜாக்ஷரம் ஒவ்வொரு திருப்பாசுரங்களிலும் நிறைந்து விளங்குகின்ற திருப்பதிகம் பாடியருளி மூத்த திருநாவுக்கரசர் உயிர்பெற் றெழும்படி புரிந்தளியது அருந்தமிழ் மொழியே. திருநாவுக்கரசர், வேதாரணியேசுரர் திருக்கோயில் திருக்கதவைப் பூட்டிவைத்த ஆரிய வேதங்களின் ஆணையை மாற்றி அவ்வலியினுலும் ஆரிய மொழியினும் சிறந்ததெனும் உண்மை நேரேவிளக்கியதுசீரிய தமிழ் மொழியே.

திருநாவுக்கரசர், முன்பு திருக்கயிலாசத்திலே வீற்றிருந்தருளிய ஸ்ரீ வாகீச முனிவராதலால் அவர்க்கு அத் திருக்கயிலை சொந்த ஸ்தானமேயாக வும், அவர் அங்குச் சென்றருளும்போது, சிவபிரான் திருக்கயிலையானது மனிதரால் நினைத்தபடி செல்லக்கூடிய தன்றென்பது விளக்கும் பொருட் டும், இன்னும் சில காலம் திருநாவுக்கரசர் பூமியி லிருந்து பாடும் திருப்பதிகங்கள் கேட்டின்புறும் பொருட்டும் திருவுளங்கொண்டு, செலவருமை காட்டித் தடுத்துத் திருவையாற்றில் திருக்கயிலைத் திருக்கோலம் தெரிசிப்பித் தருளுதற்கு ஏதுவா யிருந்தது காதல்கூர் பெருந்தமிழ் மொழியே.

இதனை, "அன்னதன்மையர் கயிலையை யணை வதற்கருளார், யன்னுதீந் தமிழ் புவியின்மேற் பின்னையும் வழுத்த, நன்னெடும் புனற்றடமு மொன் றுடன் கொடு நடந்தார், பன்னகம்புனை பரமரோர் முனிவராம் படியால்" என்னும் பெரிய புராணத் திருவிருத்தம் செவ்வே விளக்குகின்றது.

திருநாவுக்கரசர், திருப்புகலூருக்கு வந்து பற் பல அற்புதத் திருத்தொண்டுகளை செய்து கொண் டிருந்து, அதனால் ஆன்மாக்கள் பெத்தக்காலம் முத் திக் காலமிரண்டிலும் பரமசிவனுக்கு அடிமைகளே யென்பதும், அடித்தொண்டு செய்தின்புறுதலே அவ்வான்மாக்களின் கடமை யென்பதும் விளக்கி, அந்நிய சமய நிராகரணமும் சைவ சமய ஸ்தாபன மும் செய்யும்படி திருவருளால் பூமிக்கு வந்து, செய்துவந்த சிவகாரியம் பரிபூர்த்தியாகியது. இனித் திருவடி நிழலிற் புகுந்து வாழ்வோமெனத் தாமே திருவுளங் கொண்டதனால், திருநாவுக்கரசர்

முன்னருந் திருவடி நிழற் பேரின்புற்றிருந்த சீவன் முத்த நிலையரே. பின்பு உலகெலாமுய்யவே திருவருட்டிருமேனி கொண்டு பூமிக்கு வந்தனர். வந்த காரியம் முடிந்த பின் சிவபிரான் அழைக்காமலே தம்மிஷ்டப்படி முன்போலத் திருவடி நிழலிற் புகுகின்ருரென்னும் உண்மை யாவருந் தெரிந்து சிவனே யென வழிபாடு செய்துய்யுமுறை விளக்கி, அவ்வுண்மை செவ்வே தெளியும்படி "புண்ணியா வுன்னடிக்கே போதுகின்றேன்" சிவ புண்ணியத் திருமேனியனே அடியேன் தேவரீர் திருவடி நிழலில் அமர்ந்து வாழ வருகின்றேனென்று தாமே சொல்லிக் கொண்டு புகுந்தருளியது தகுந் தமிழ் மொழியே.

சுந்தரமூர்த்திகள், சிவபிரானது விருப்பம் நிறைவேறும்படி பூமியில் வந்தருளித் திருமணந் தொடங்கிய பதினறு வயசு முதல் பதினெட்டு வரை முப்பத்தேழாயிரந் திருப்பதிகம், மூன்றிலக்கத் தெழுபதினயிரம் திருப்பாடல்கள் பாடியருளியதும், இத்தனை விஸ்தாரமாகப் பாடியிருக்கவும் "நானென பாடல்?" அபார சிவ மகிமையில், நான் என்ன பாடல்களைப் பாடினேன்? என்று பரிந்து விளக்கி யருளியதும், திருந்து வளத் தமிழ் மொழியே.

சுந்தரமூர்த்திகள் திருக்கயிலையில், திருவணுக்கராய் அமர்ந்தருளிய நிலைமையே பூமியிலும் விளங்கச், சிவாலயங்களிற் சீவர்களுய்யும்படி சிவபிரானது திருமேனி தீண்டித் திரிகாலங்களிலுஞ் சிவார்ச்சனையே செய்து செகமெலாம் புகழத் திருவணுக்கத் திருத்தொண்டர்களாய்த் திகழுகின்ற

சிவப்பிராமணர்கள் திருக்குலத்தில், சடையநாயனுர் இசை ஞானியார் இருவரும புரிந்த பொருவருந் தவத்தால் மூன்று வயசுப் புதல்வராய்த் தோன்றி யருளித் தமது திருமேனித் திருவழகும் சிவப் பொலிவும், திருவருள் விளக்கமுங் கண்டு பேராசை கொண்ட அரசர்க்கும் அபிமான புத்திரராய்த் தமது வைதிக சைவ மாண்பொடு ராஜ வரிசைகளும் விளங்க வளர்ந்து வந்து திருமணப் பருவஞ் சேர்ந்தபோது சிவபிரான், சீவர்களுக்கு வினைப் பயன் நியதி தத்துவம் நியமித்த முறைப்படி யன்றி மாறிச் சேராதென்னும் விதி முறையை யாவர்க்கும்விளக்குவாராய்ச் சுந்தரமூர்த்திகளுக்குத் திருக்கயிலையில் நியமித்த முறைக்கு வேருகச் சடையனுரால் பேசி நிச்சயிக்கப்பட்ட திருமணத் தை விலக்கித் தடுத்தாட் கொள்ளும்படி வந்து வழக்குப் பேசி ஆண்டவ னடிமையின் மாண்டகு திறமே, காண்டக வரைந்த, நீண்டநாட் பழமை பூண்டொளிரோலையை வேண்டி முன் காட்டியது சேண்டமிழ் மொழியே.

சுந்தரமூர்த்திகள், தம்மைச் சிவபிரான் மணம் விலக்கி அடிமை கொண்டபின் திருத்துறையூருக்கு வந்து பணிந்து "தலைவா, வுனை வேண்டிக்கொள் வேன் றவ நெறியே" என்று பாடியருளி அதனுல் "எம்பெருமானே தேவரீர் மணம் விலக்கி வலிந் தடிமை கொண்டருளினீர் ஆதலால், இனி அடி யேனுக்குத் தவநெறி தந்தருளுக" வென்று வேண்டிக்கொள்ளுதல் விளக்கி, அதனுற் சரியை கிரியா யோக ஞானத் திருத்தொண்டு புரியும் தவ மார்க்கத்திற் புகுதற்கு விருப்புவோர், எத்துணைச்

சிறந்தோராயினும் சிவபிரானை வேண்டித் திருவருளாற் சிவதீக்ஷாதி சிவ சமஸ்காரம் பெற்றே செய்ய வேண்டுமென்னும் சிவாகம விதிமுறை தெரித்தருளியது வரத் தமிழ் மொழியே.

சுந்தரமூர்த்திகள், திருவதிகைக்கு வந்து திரு வீரட்டானேசுரரைத் தெரிசிக்க நினைந்தும, அவரிடத்துள்ள அன்பைக் காட்டிலும் அப்பமூர்த்தி யிடத்துள்ள அன்பே அதிவலியாய்ப் பெருகுதலால் அவர் கைத்தொண்டுஞ் செய்துகொண்டு வீற்றிருந் தருளிய அத்தலத்துள் மிதித்துச் செல்லுதல் கூடா தென்று புறத்தே யொதுங்கி யிருக்கவும், வீரட்டா னேசர் அச்சுந்தரர் திருப்பாடலின் விருப்பே மிகுதலால், தாமே வலிந்து வந்து அவர் சிரசில் பல முறை திருவடி சூட்டி யருளி அவர் பாடியருளக் கேட்டு மகிழ்ந்தது, நீட்டிசைத் தமிழ் மொழியே.

சுந்தரமூர்த்திகள், தில்லைக்கு வந்து சிற்சபேசர் திருமுன் பணிந்து சிவானந்தப் பெரு வெள்ளம் திளைத்து நிற்கும் போது சிற்சபேசர், தில்லைக்குந் திருவாரூருக்குமுள்ள எத்தகை யொற்றுமை நயங் கருதியோ, "சுந்தரனே! நமது திருவாரூர்க்கு வருக" வென்று அசரீரியாயருளியது இசை கூறுந் தமிழ் மொழியே. ஈண்டுக் கூறிய திருவாரூரைச் சிற்சபேசர் "தரளமெறிபுனன் மறிதிரைப் பொன்னி, மடுத்த நீள்வண்ணப் பண்ணையாரூரில்" என்று பதினொரு சொற்களாற்றொடுத்து அடுக்கி விசேடித் தது பதினொரு ருத்திரர் முதலிய உருத்திர கணங் களே அத் திருவாரூரில் வாழ்கின்றவர்க ளென்னும் குறிப்புப் போலும். இதனை, நமிநந்தி யடிகளுக்குச் சிவபிரான் விளக்கினமையாலும், அவரும் அதனை நேரே கண்டமையாலும் தெளியலாம்.

சுந்தரமூர்த்திகள் திருத்தோணியம்மை யப்பரைத் தெரிசிக்க விரும்பி வந்தும், உலகெலா முய்ய உமையம்மையார் திருமுலைப் பாலமுதுண் டருளிய இளைய பிள்ளையார் அவதரித்தருளிய பெருஞ் சிறப்பு வாய்ந்த தன்றோ வென்னும் விருப் பதிக வாய்மையால் சீகாழித் திருப்பதியை மிதித்துட் செல்லுதற்கஞ்சிப் புறத்து வலமாகச் செல்லவும், அவர் திருப்பதிகங் கேட்டலிற் பேராசை கொண்ட தோணியப்பர், அம்மையாரோடு நேராக வந்து திருக்கோலக் காட்சி கொடுத்தருளக் கண்டும் அங்கு நின்றே பாடியருளியது நீடியற் றமிழ் மொழியே!

சுந்தரமூர்த்திகள், திருவாரூர் சமீபிக்க வரும் போது தியாகேசப் பெருமான் அத் திருவாரூரில் வாழ்வார் யாவர்க்கும் "ஆரூரனை நாமே ஆராத காதலினால் ஆரூர்க்கு வருக" வென்று தில்லையி லழைத்தோம். அவனும் ஆராத காதலுடன் வருகின்றானென்றும், "அவன் நம்மில் வேறல்லாத நமது சொரூபனே; ஆதலால், நாமே சென்றழைக் கும் பெருந்தகுதியுடையா" னென்பது தோன்ற நம் ஆரூரன் என்றும் "அவனை மகிழ்ந்தெதிர்கொண்ட ழைத்து வாருங்கள்" என்றும் கூறியருள, அவர்கள் அவ்வாறு எதிர் சென்று பணிந்து சூழ்ந்து வரும் போது சுந்தரர் மேற்காட்டிய பெருந் தகுதியினரா யிருந்தும், திருவாரூரில் வாழ்வா ரெல்லாம், சிவ கணத்தவரே யென்னும் உண்மை விளக்குவாராய் அவர்களை நோக்கி "எந்தையிருப்பது மாரூ ரவ ரெம்மையும் ஆள்வரோ? கேளீர்" என்று வினவி யருளியது இனிய தமிழ் மொழியே!

சுந்தரமூர்த்திகள் திருவாரூர்க் கோயிலிற் சென்று தேவாசிரயன் முன் பணிந்துட் சென்று, சிவ சந்நிதியிற் பன்முறை பணிந்து துதித்து நிற்கும் போது, சிவபிரான், "அன்பனே நம்மை உனக்குத் தோழமையாகத் தந்துவிட்டோ மென்று அருளிச் செய்தது, மன்றலந் தமிழ் மொழியே.

சுந்தரமூர்த்திகள் அன்று முதல் தம்பிரான் றோழரென்னுந் திருப் பெயரும் பெற்றனர். அரி பிரமாதி தேவர் முதலிய சீவர் யாவரும் தம்பிரா னடிமைகளே. இதுவே, வேதாகம நூற்றுணிபு. ஈண்டுச் சுந்தரரைச் சிவபிரான் றோழரென்றது, இச்சுந்தரர், திருவருளால் திருக்கண்ணுடியினின்று வந்தருளிய நிர்மல சிவனே என்னும் உண்மை யாவருங் கண்டு வழிபாடு செய்துய்க வென்னும் திருவுளக் கருத்தேயாம் "நான் உனக்குத் தோழன்" என்று கூருது "நம்மை உனக்குத் தோழமையாகத் தந்து விட்டோம்" என்றது, நீ, நம்மைக்கொண்டு எந்தக் காரியமுஞ் செய்து கொள்ளலா மென்னுங் கருத்தே போலும்!

சுந்தரமூர்த்திகள், தம்மைத் தியாகேசப் பெருமான் "அடியார்களைப் பாடுக" என்று பொது வாகக் கூறியருளவும், அப்பொதுமை நீக்கிச் சிறப் பாகத் திருத்தொண்டத் தொகை பாடியருளியது கருத்தொன்று திருத்தமிழ் மொழியே.

சுந்தரமூர்த்திகள், பூமியில் மனித ரூபராய் வந்த பின்னும் திருக் கயிலாசபதியாகிய சிவ பிரானது திருவருட் டிருமேனியினரே யென்னும் உண்மை யாவருங் கண்டுய்யும்படி திருக்கயிலாயத் துள்ள சிவகணங்களே பூமியில் வந்து கூலியாட்

களாகக் குண்டையூரிலுள்ள நெல்மலை முழுதுஞ் சுமந்து வந்து திருவாரூரிற் சேர்க்கும் பணி செய ஏவியது அணி செயத் தமிழ் மொழியே!

சுந்தரமூர்த்திகள், தம்மிடத்து அன்புமிக்க கோட்புலி நாயனர் அவர் புத்திரிகளை, மணந்து கொள்ளும்படி வேண்டவும், தாம் அன்றும் இன்றும் என்றும் காமாரியாகிய சிவ சொரூபரே என்னும் உண்மை விளங்க "அவ்விரு புத்திரிகளுக்கும் நாம் தந்தை" என்றருளியது செந்தமிழ் மொழியே.

சுந்தரமூர்த்திகள், திருப்புகலூர் தெரிசித்துப் புறத்து வந்து செங்கற்கள் தலையணையாகச் சயனித் தெழுந்தவுடன் சிவபிரான் அச் செங்கலெல்லாம், மாற்றுயர்ந்த செம்பொன்னக்கி யருளும்படி செய்தது தெருளுந் தமிழ் மொழியே.

சுந்தரமூர்த்திகள், தமக்குத் திருமுதுகுன்றத் திற் சிவபிரான் பொன் தந்தருளும்படியும் "அப் பன்னீராயிரம் பொன் முழுதும் திருவாரூரில் தருக" வென்று வேண்டியதற்கு இணங்கும்படியும், திருவாரூரிற் குளத்திற் றும் குறித்த இடத்தில் அப் பொன்னை மறைக்கும்படியும், அதற்கொரு பதிகம் பாடிய பின்னும் மாற்றுக் குறைவு செய்யும்படியும், அதன்மேலும் பாடியருளக்கேட்டு மகிழ்ந்து நிறைவு செய்தருளும்படியும் இவ்வாறு சிவபிரான் பன் முறையும் விரும்பச் செய்வது கரும்பினு மினிய அருந்தமிழ் மொழியே.

சுந்தரமூர்த்திகளைத் திருமுதுகுன்றிற் சிவ பிரான் "இப்பொன்னை இம் மணிமுத்த நதியிற் போட்டுத் திருவாரூர்க் குளத்தில் எடுத்துக் கொள்ளுக" வென்றருளினரன்றி, "அக் குளத்தில்

இன்ன இடத்தில்'' என்று கூறவில்லை, மூர்த்தி களும் "எந்த இடத்தில்'' என்று கேட்டுக்கொள்ளவு மில்லை, அப்பொன்னில் மச்சமும் வெட்டி வைத்துக் கொண்டவராதலால் அவ்வாறு கேட்க மறந்தவரு மல்லர், தாம்நினைத்தவிடத்தில் பொன் வருமென்றே கருதினர் போலும்!

திருவாரூர்க் குளத்தில் ஈசான மூலையிலிறங்கிப் பார்த்தனர். அங்கு அதனைக் கண்டிலர், காணாத போது வேறிடத்திற் பார்க்கலாம், அவ்வாறின்றி அங்கு நின்றே மேலும் பாடியருளினார். அதன் பின் அப் பொன் முழுதும் அவ்விடத்திலே வரப் பெற்றனர், அம் மட்டிலு மமையாமல் மாற்றுக் குறைவு நீக்கித் தரும்படி அதன் மேலும் பாடி யருளினர். இவை யெல்லாம் பொன் விருப்பத்தாற் செய்தனவா மென்று உள்ளீ டறியாதார் கூறிப் பாதகராகாவண்ணம், சுந்தரர் எக்காலத்தும் "சிவ சொரூப நிலையரே'' என்னும் உண்மையை யாவருங் கண்டுய்யும்படி சேக்கிழார் பெருமான் அச்சுந்தரரை அவ்விடத்தும் "நீத்தாருந் தொடர் வரிய நிலை நின்றார்'' என்று விளக்கி யருளியது, வளத் தமிழ் மொழியே!

சுந்தரமூர்த்திகள், தாம் வரும் வழியில், திருக் குருகாவூர்ச் சிவபிரான், ஒரு பிராமணராய் வந்து தண்ணீர்ப் பந்தருடன் அறு சுவை யமுதும் அமைத்து வைத்துக் கொண்டு தம்மையே யெதிர் பார்த்திருந்து தாம் வந்தவுடன் உபசரித்துண்பித் தருளும் உவப்புறச் செய்தது, தவப் பெருந் தமிழ் மொழியே!

சுந்தரமூர்த்திகள் திருவொற்றியூருக்கு வந்த போது சிவபிரான் தம்மிடத்து அன்புமிக்கவர் யாவ ராயினும் சத்தியந் தவறினல் இடர்ப்படுவரென்பது உலகர்க்குணர்த்தி யுய்விக்கத் திருவுளங் கொண்டே சபதஞ் செய்வித்துச் சங்கிலியாரைத் திருமணஞ் செய்வித்தபின். அச்சுந்தரர், சில நாளங்கிருந்து தாம் சபதஞ்செய்தபடி சங்கிலியாரை விட்டு நீங்காமல் அத் திருவொற்றியூரிலேயே தங்கினல், அது, முன்பு, "பித்தா" வென்று பாடியருளிய வுடனே சிவபிரான், நீ, யிப்படியே பற்பல தலங் களிலுஞ் சென்று சென்று பாடுக, வென்றருளிய ஆஞ்ஞைக்கு விரோதமாகு மென்று கருதியே அவ்வாஞ்ஞை வழிச் செல்வாராய் அத்தலத்தை விட்டு நீங்கினர். தமது கண்ணெளி மறைந்தது. நீங்காதிருந்தால் மறையாதென்பது தெரிந்தும், சிவாஞ்ஞையே பேணிச் சென்றனர். அது "பல தலங்களிலுஞ் சென்று பாடுக" வென்றருளிய சிவபிரானே அதற்கு மாருக உலகருணர்ந் துய்தற்காகவே சபதஞ் செய்வித்தனர், ஆதலால் இக்கண் மறைவை அவர் திருவுளக் குறிப்பின்படி இப்பொழுது மேற்கொண்டு, பின்பு திருவருளால் மாற்றிக் கொள்வோ மென்னுங் கருத்தேயாம். அவ்வாறு கருதிச் சென்று திருவெண்பாக்கம், திருக் காஞ்சி, திருத்துருத்தி முதலிய தலங்கள் பணிந்து கோலும் ஒரு கண்ணும் நோய் நீக்கமும் பெறப் புரிந்தது விரற் பெருந் தமிழ் மொழியே.

சுந்தரமூர்த்திகள், திருவாரூர்க்கு வந்து, தமது கண் மறைந்தது மேற்கூறியபடி திருவருட் செயலாலன்றித் தம் குற்றத்தாலன்று. அம்மட்டோ

எக்காலத்தும் எக்குற்றமும் தம்மிடத்தில்லை யென்னும் உண்மை யாவர்க்கும் தெரியும்படி. "குற்றமொன்றுஞ் செய்ததில்லை கொத்தை யாக்கினீர்" என்று கூறி மற்றைக் கண்ணும் பெற்றுப் பாடியதும் வெற்றித் தமிழ் மொழியே.

சுந்தரமூர்த்திகள் தாம் கருதுவன வெல்லாம் தமது தோழராகிய சிவபெருமானே யெப் பொழுதுஞ் செய்துவரும் முறைப்படி இப்பொழுதும் பரவையார் திருமாளிகைக்குத் தூதராகச் சென் றருளச் செய்தது தென்றமிழின்னிசை மொழியே.

சுந்தரமூர்த்திகள் மனித ரூபமாய்ப் பூமிக்கு வந்தனராயினும். அவர் எப்போதும் "உலகாதீத சிவ சொரூபரே" என்பது காட்டவே உலகாதீத ராகிய சிவபிரான், உலகிலில்லாத புது வழக்கமாக அரிபிரமாதி தேவர், முனிவர், திருநந்தியாதி சிவகணத் தலைவர், பல்லாயிரவர் சூழத் தூது செல்லும்படியும், இது குற்றமென்று கூறிய ஏயர் கோன் கலிக்காம நாயனுர், தம்மையே பற்றிநிற்கும் மெய்யன்பராயிருக்கவும், அவர் கூறியதே பெருங் குற்றமென்று தண்டிப்பாராய், அவரை வருத்துஞ் சூலை நோயையனுப்பி, அச்சுந்தரராலேயே அந்நோய் நீங்கிச் சுந்தரர் சொரூப நிலை தெரிந்து அவரிடத்து மெய்யன்பினராய்ப் போற்றி வாழ்வுறச் செய்யும்படியும் விருப்பதிகஞ்செய்தது திருப்பெருந் தமிழ் மொழியே.

சுந்தரமூர்த்திகளது சொரூப மகிமையை விளக்குஞ் சிற்சபேசரானவர், சேரர் பெருமானுக்குத் தினந்தோறும் நியமமாய்க் கேட்பித்து வந்த திருச்

சிலம்பொலி ஒருநாட் கேட்கப் பெருமையால் சேரர் பெருமான் தமது உயிர்க்கிறுதி செய்யப் புகுஞ் சமயம். சிற்சபேசர் விரைந்து வந்து அன்பனே! தில்லையில் நமது சுந்தரன் திருப்பாடல் கேட்டு அதன் வசமாகி நின்றோமாதலால் உனக்குச் சிலம் பொலி கேட்பிக்கத் தாமதித்தன மென்று கூறி யருளச் செய்தது ஏறு சீர்த் தமிழ் மொழியே.

சேரர்பிரான், சுந்தர சிவ மகிமை நமது சிற் சபேசரும் விதந்தெடுத் தோதும் மேன்மையினதா யிருக்கவும், அவரைத் தெரிசித்தின்புறுது இத்தனை காலங் கழித்தேனே யென்று வருந்தி விரைந்து தில்லைக்கு வந்து, சுந்தர மகிமை தெரிவித்தருளிய சிற்சபேசரைப் பணிந்து "பொன்வண்ணம்" என்று தொடங்கும் இன் வண்ணத் தமிழ் பாடி யருளித், திருவாரூர்க்கு வந்து அந்தமில் கீர்த்திச் சுந்தரமூர்த்திகள் செந்தளிர் புரையும் பைந்தண் பதமலர் மூந்துற வணங்கி நைந்துளமுருக உந்து சீர் நலனுவந்து போற்றெடுப்பச், சுந்தரர் அச்சேரர் பிரானைத் தமது திருக்கரங்களால் தூக்கி எடுத் தணைத்து இன்பமீதுர மன்புகழ் விளக்கி அன்புரை பகர்ந்தது நன் பெருந் தமிழ் மொழியே.

சுந்தரமூர்த்திகளைச் சேரர்பெருமான் தம்மூர்க்கு வந்தருளுக வென்று வேண்டுதற்கிணங்கி அவ ருடன் சுந்தரர் பல தலங்கள் பணிந்து ஆங்காங்கு பற்பல அற்புதப் பதிகங்கள் பாடியருளியது பொற்புறுந் திருத் தமிழ் மொழியே.

சுந்தரமூர்த்திகளுடன் திருக்கண்டியூர் தெரிசித்து வந்த சேரர்பிரான் திருவையாறு தெரிசிக்க விரும்பி

மத்தியிலுள்ள காவிரி நதி பிரளய வெள்ளமெனப் பெருகி வருவது தெரிந்தும், சுந்தரரை வணங்கி எம்பெருமானே அடியேன் மனம் திருவையாறு தெரிசிக்க விரும்புகிறதென்று வேண்டினர். இதனுல் அச்சுந்தரர், தம்மை வழிபடுவாரை வேறெவராலும் கடப்பிக்கமுடியாது கரையின்றி விரிந்து எல்லேப் படாது பெருகும் பிறவிப் பெருவெள்ளங் கடப்பித் தருளும் பெருவலி படைத்தவராதலால் அவர்க்கு இக்காவிரி வெள்ளங் கடப்பித்தல் அரிய காரியமன் றென்று அவரது சிவசொரூப நிலேயினுண்மை உள்ளபடி தெரிந்தே அவ்வாறு வேண்டினரென்பது தெளிவாம். அவ் வேண்டுகோட் கிணங்கிய சுந்தரர் அந் நதித் தென்கரையி னின்று, "ஐயாறுடைய அடிகளோ" வென்றழைத்தருள, அப்பெருவெள்ளம், மேற்றிசையிலிருந்து கீழ்த்திசை நோக்கிச் செல்லும் வழக்கம் மாறி, மேற்றிசையில் ஒரு பளிங்கு மலே நிற்றல் போல் நின்றுவிட, அதன் கீழ்த்திசை சிறிதும் நீரின்றிச் சுத்தபூமியாய் விளங்கச் சுந்தரர் சேரர் பிரானுடன் சென்று பஞ்சநதீசர் செஞ்சரண் பணிந்து அப்பதிகம் முடித் தருளியது ஒப்பதிக மில்லா ஒண்டமிழ் மொழியே.

சுந்தரமூர்த்திகள் சேரர் பிரானுடன், அவரது ராஜதானியாகிய மகோதை என்னுந் திருநகர்க்கு வந்தருளி அவரால் நாடோறும் அளவு கடந்த ஆதரவுடன் பூசிக்கப்பெற்று வீற்றிருந்தருளித் திரு வஞ்சைக் களந் தெரிசித்துக் கொண்டு வருநாளில் திருவாரூரை நினேந்து அங்குச் செல்லத் தொடங்கும் போது சேரர் பெருமான் பிரிவாற்ருது வருந்துதல் தெரிந்து அவரைத் தழுவி இனிய

மொழி கூறிச் சமாதானஞ் செய்து கொண்டு செல்வாராயினர். சேரர் பெருமான் திருவாரூரில் பரவையார் திருமாளிகையில் சேர்க்கும்படி பல் வகைப் பெரும்பொருள்கள் அனுப்பி உடன் சென்று சுந்தரர் ஆஞ்ஞையை மறுக்கமாட்டாது மேலும் பணிந்து விடை பெற்று மீண்டனர். சுந்தரர், தமது திருத்தொண்டர் பல்லாயிரர் சூழ்ந்து வரச் செல்லும் போது திருமுருகன் பூண்டியிற் சிவபிரான், சுந்தரர்க்கு ஆவனவெல்லாம் தாமே செய்துவரும் வழக்கப்படி செய்வாராய், முன் குண்டையூர்க் கிழவர் கொடுத்து வந்த நெல் மலையைத் தமது சிவகணங்கள் மூலமாகக் கொடுத்தருளியது போல இப்போதும் சேரர்பிரான் கொடுத்த பொருள் முழுதுந் தமது சிவகண வேடராற் கவர்வித்துச் சுந்தரர் தமது திருச்சந்நிதிக்கு வந்து பாடியருளிய பின் கொடுத்தருளிய திருவருள் நிகழ்ச்சியின் தொடக்கத்தில் சுந்தரர், "எற்றுக்கிங் கிருந்தீ ரெம்பிரானீரே,' என்று உரித்துரை விரித்தருளியது வரத் திருத் தமிழ் மொழியே.

சுந்தரமூர்த்திகள், திருவாரூர்க்கு வந்து சில காலம் பல தலங்கள் தெரிசித்துக்கொண்டிருந்து மீண்டுஞ் சேரர் பெருமானைக் காண விரும்பிச் செல்லுங்கால் அவிநாசிக்கு வந்து, சில வருஷங் களுக்குமுன் முதலையால் விழுங்கப்பட்டுயிர் நீங்கிய பாலகனை அழைத்துக்கொடுக்கத் திருவுளங்கொண்டு அக்குளக்கரைக்கு வந்து, அது நீருமின்றி வெறும் பொட்டலாயிருப்பது கண்டும் திருப்பதிகம் பாடத் தொடங்கி, மழை முதலிய எவ்வித காரணமுமின்றி

அக்குளத்தில் நீர் நிறைதலும், முதலை வருதலும், அதன் வயிற்றில் பாலனுடல் முன் சென்ற கால வளர்ச்சியுடன் வருதலும், அவ்வுடலில் யமன் அவ் வுயிரைச் சேர்த்தலும், அம்முதலை தானே கரையில் வந்து பாலனை யுமிழ்தலுமாகிய எவர்க்கும் அரிய இவ்வத்தியற்புத சிவச் செயல் உடனே நிகழும்படி கூறியருளியது ஏறிசைத் தமிழ் மொழியே.

சுந்தரமூர்த்திகள், முதலையுண்ட பாலனை யழைத்தருளிச் சேரர்பெருமான் திருநகர்க்குச் செல்லுங்கால் முன்னரே அவ்வரசர் தெரிந்து அலங் கார வகையெல்லாம் அதி விரிவாகச் செய்வித்து அளவு கடந்த ஆனந்த நிலையராய், "செய்வ தொன்று மறியாது சிந்தை மகிழ்ந்து களி கூர்ந் தென், ஐயனணைந்தா னெனையாளு மண்ணலணைந்தானூரிற், சைவனணைந்தா னென்றுணையாந் தலைவனணைந்தான் றரணியெலாம், உய்ய வணைந்தா னணைந்தா னென் றோகை முரசஞ் சாற்றுவித்தார்." இராஜ வரிசையெல்லாஞ் சூழ விரைந்து வந்து சுந்தர சிவ பாதங்களிற் பன்முறை பணிந்தார். அவரைத் தமது பட்டத்து யானை மீது எழுந்தருளுவித்தார். தாமும் அவர் பின்னிருந்தார் குடை பிடித்துக் கொண்டு சென்றார். தமது ராஜ மாளிகையுள் ஆத்தான மண்டபத்து ரத்தின சிங்காதனத்தின் மீது சுந்தரரை வீற்றிருந் தருளச் செய்தார். பூஜோப கரணங்கள் பற்பல கொண்டு விதி முறைப்படி பூசித்தார். மேலும் பன்முறை பணிந்து நின்று துதித்தார். சுந்தரர் அவ்வரசருடன் திருவஞ்சைக்களம் பணிந்து அங்கு

வசித்து வருநாளில் ஒருநாள் தாம் மாத்திரம் திரு வஞ்சைக்களம் சென்று பணிந்து, நாம் சிவாஞ்ஞை யின்படி பூமிக்கு வந்து தலங்களெங்கும் பற்பல பதிகங்கள் பாடி அற்புத வகைகளாற் சைவநெறி வளர்த்து வந்த தெய்வச் செயல் பூர்த்தியாய தென்னும் திருவுளக் கருத்தால் திருக்கயிலைக்குச் செல்லுங் குறிப்புத் தோன்றப் பாடியருளியது பிடுயர் தமிழ் மொழியே.

சுந்தரமூர்த்திகள் திருவுளக் குறிப்பின்படியே எப்பொழுதுஞ் செய்து வந்தருளிய திருக் கயிலாச பதியானவர் அச் சுந்தரர் தமது சொரூபரே யென்பதை முடிவில் யாவர்க்குந் தெளிவாக விளக்குவாராய்த், தாமல்லாது பிறரெவராலும் ஏறி நடத்த முடியாததும் பிரணவ சொரூபமானதும் அயிராவண மென்னும் பேர் பெற்றதுமாகிய வெள்ளானைமீது அச்சுந்தரரை அழைத்து வரும்படி அரிபிரமேந்திராதி தேவர்களுக்கு ஆஞ்ஞாபித்தருள அவ்வாணை சிரமேற் கொண்ட அத்தேவர்கள் அவ்வானையுடன் பூமியில் திருவஞ்சைக் களத்துக்கு வந்து, சுந்தரர் அத்திருக்கோயிலுள் ளிருந்து வெளிவரும் வரை எதிர்நோக்கி நின்று வந்தவுடன் அவர் திருவடிகளில் அத்தேவர் யாவரும் வணங்கி எம்பெருமானே தேவரீர் இவ்யானை மீது எழுந் தருளித் திருக்கயிலைக்கு வந்தருளும்படி சிவபிரான் ஆஞ்ஞாபித்தருளின ரென்று விண்ணப்பித்தார்கள். சுந்தரர் சேரர் பிரானும் உடன் வருக வென்னுந் திருவுளக் கருத்தினராய் அவ்வானை மீது விற்றிருந் தருளி ஆகாயவீதியில் அத்தேவரெலாம் வேதசிவா

கமாதி விசேட வாக்கியங்களால் துதித்துக்கொண்டு சூழ்ந்துவர, தமக்கு நெடுங்காலந் தொண்டு செய்து பிரியாதுடன் சேர்ந்தொழுகிய திருத்தொண்டரெல்லாம் தமது அணிமையில் வாழ்ந்துவர, சேரர் பெருமான், தமது திருவுளக் கருத்துணர்ந்து அவ்வருளாணை சிரமேற்கொண்டு. திருவைந்தெழுத்தோசை செவியிற் புகுத்திச் சேண்செலும் வலி தாக்கிய திருக்குதிரை மீதெழுந்தருளி மேற்புகுந்து தம் முன்பு வந்து மும்முறை பணிந்து முன்னணியாகச் சேர்ந்து வரத் திருக்கயிலையணுகச் சென்றருளும்போது, தாம் சிவ சொரூபரே என்னும் உண்மை விளங்கப் பாடி யருளியது, "தானெனை முன்படைத்தான்" என்பது முதலிய இன்ப மந்திரங்களாய் அன்பரு ளியல்புகள் மன்பொலிந்திலங்கி நின்றொளிர் பதிகத் தென்றமிழ் மொழியே. இத்திருப்பதிகத்தில் மேற்கூறியபடி, அரிபிரமாதி தேவரெல்லாரும் திருவஞ்சைக் களத்து வந்து சுந்தரமூர்த்திகளை வலஞ் செய்து வணங்கி விண்ணப்பித்தது முதலியவைகள் தெளிவாய் விளங்குகின்றன.

சுந்தரமூர்த்திகள், தாம் மனித ரூபராய்ப் பூமிக்கு வந்த உண்மையறியாத சிலர், தம்மைக் கர்ம வசத்தால் மாயா சரீரிகளாய் வரும் சீவர்களில் ஒருவரென்று நினைத்து நரகுரு வண்ணம் திருவுள்ளம் இரங்கி, "நொடித்தான் மலை யுத்தமன்" என்னைத் தனக்கே உரிய பிரணவ ரூப யானை மீதமர்ந்து வரும்படி அத்தகைய, "மத்தயானை யருள் புரிந்து", அதனுல், "ஊனுயிர் வேறு செய்தான்". மனித ரூப நோக்கி என்னை, (ஊன்)

மாயா சரீரத்தைப் பற்றி நிற்கும் உயிர் வர்க்கத் தொருவன் போலு மென்று சிலர் நினைக்கும் நினைப்பை மாற்றித் தானேறும் யானை மீது யானேறி வருதலால் யான் பூமிக்கு வந்த பின்னும் முன்னைத் தனது சாய ரூபசிவனே, என்னுமுண்மை விளங்கவே யான் அம்மனித ரூபத்தோடு திருக் கயிலைக்கு வரச் செய்தானென்று முடிவிற் கூறி யருளியது வடிசொற் றமிழ் மொழியே.

சுந்தரமூர்த்திகள் திருக்கயிலை முதல் வாயிலில் யானையினின் றிறங்கியருளி மிகுந்த ஆவலுனுட் சென்று சிவ சந்நிதியில் பன்முறை பணிந்தெழும் போதே, அவரை நெடுநாட் பிரிந்த ஆற்றுமை விளங்கும்படி சிவபிரான் மிகுந்த ஆவல் காட்டி சுந்தரனே வந்தனையா வென்று முந்தற மொழிந் ததும் செந்தமிழ் மொழியே.

சுந்தரமூர்த்திகள், யாதொரு தடையுமின்றித் திருக்கயிலைச் செம்பொற் றிருக்கோயிலுள் வந்ததை நேரே கண்ட மந்திரமா முனிவர்கள், தமது சொந்த மனையில் வருவார் போல்வருகின்ற இவர் யாரென்று கேட்டனர், சிவபிரான் நமது உரிமையவனாகிய ஆரூரனன்றோ வென்று கூறியருளி அதனாலும் சுந்தரர் சொரூப மகிமை விளக்கி யருளினார். இது சுந்தரர் உள்ளே வந்தபின் நிகழ்ந்தது. இதனை முன்னர் யானை மீது வரும் போதே, "மந்திரமா முனிவ ரிவனாரென வெம் பெருமான், நந்த மாரூரனென்று ரைத்தான் மலை யுத்தமனே" யென்று விளக்கி யருளியது அளக் கருந் தமிழ் மொழியே.

சுந்தரமூர்த்திகள், தாம் கருதுவன வெல்லாம் சிவபிரான் அவ்வப் பொழுதே செய் தருளும் உரிமை நிலை, தம்மளவின் மாத்திரமின்றி தம்மை யடுத்தார்க்கும் தாம் கருதியவாறு செய் தருள்வார் என்னும் உண்மை விளங்கத் தாம் திருவஞ்சைக்களத்தில் யானைமீதேறியருளும்போது நினைத்தருளப் பெற்ற சேரர்பிரான் தம்முடன் வந்து திருவாயிலினிற்றலைச் சிவபிரானுக்கு விண்ணப்பித் தருளியது வண்ணப் பசுந் தமிழ் மொழியே.

சுந்தரமூர்த்திகள் விண்ணப்பித்தபடியே சிவபிரான் அழைத்தருள உட்புகுந்து பணிந்து பேரின்பந் திளைத்து நின்ற சேரர்பிரான் சிவ சந்நிதியில் பாடியருளியதும், அத் திருக்கயிலையி லுள்ள மந்திர மாமுனிவர்கள் மற்றும் பல்கோடி யுருத்திரர் மகரிஷிகள் மகா சாஸ்த்தா திருநந்தி தேவர் சிவகணத்தவர் அரிபிரமாதி தேவர் முதலிய யாவரும் கேட்டு மகிழ்ந்ததும் நீட்டு சீர்த் தமிழ் மொழியே.

மாணிக்கவாசகர், திருக்கயிலையிற் சிவனருளால் நிர்மல சிவரூபராய், அரிபிரமாதி தேவர் முனிவர் யாவருந் தம்மை வணங்கி வேண்ட அவரவர் தராதரந் தெரிந்து அம்முறையே உட்புகுத்தியருளுந் தலைமை பெற்று வாழுந் திருநந்தி தேவரே.

இவர், வேதசிவாகமாதி மெய்ந் நூல்களால் விதந்தெடுத்தோதும் சைவ சித்தாந்தத் தலைநெறி தழைத்தோங்கவும், அதற்கிடர் விளைக்கும் அந்நிய நெறிகள் இளைத்தேங்கி ஒதுங்கவுமே திருவருளால்

பூமிக்கு வந்தருளினர், இவர் முன்பு திருக்கயிலையில் சிவபிரான் திருவணுக்கரா யிருந்தபடியே இப்பூமி யிலும் இருமொழிகளும் பேணி எப்போதுந் திருவணுக்கராய் முப்போதும் சிவபிரானைப் பூசித்துவரும் ஆதிசைவப் பிராமணர் திருக்குலத்து வந்தருளி வேதசிவாகமங்கள் கூறுகின்ற வைதிக சைவ மேன்மை விளக்குவாராய் முதலில் அவ்வேத மத்தியில் உயிராய் விளங்கும் ஐந்தெழுத்தை, "நமச்சிவாய வா அழ்க" என்று வேதநெறி வைதிக மேன்மையையும் அவ்வேதங்களைக் காட்டிலும் அதி மாதுரியசார சிவசொரூபமாயுள்ளது சிவாகமங்களே என்னுமுண்மை விளக்குவாராய், "ஆகம மாகி நின் றண்ணிப்பான்றாள் வாழ்க" வென்று சிவாகம நெறிச் சைவ மேன்மையையும் விளக்கியருளியது வளத் தமிழ் மொழியே.

அண்ணித்தல் – இனித்தல். இதனை, "திருப் புத்தூரானைச் சிந்தை செயச் செயக் கருப்புச் சாற்றிலு மண்ணிக்குங் காண்மினே", என்பது முதலிய தெய்வச் சுருதித் திருவாக்குகள் பற்பல விடங்களிற் பொற்புற விளக்குகின்றன.

மாணிக்கவாசகர் மேற்கூறியவாறு தொடங்கி வேத வேதாந்த சாரமாகிய மெய்ப் பொருள்க ளமைந்து பொய்ப் பொருள்கள் விலக்கிச் சித்தாந்தச் செம்பொருள் விரிந்து விளங்குந் திரு வகவல்கள் நான்கும் திருவிருத்தங்கள் அறுநூற் றின்மேலும் பாடியருளியது பீடுயர் தமிழ் மொழியே.

மாணிக்கவாசகர், சைவநெறி விளக்கி உலகரை உய்விக்க வந்ததற் கிசைய, அதனை முதலில் அரசர்க்கு விளக்கி அருள்வழிப் புகுத்தினுல், குடிகளும் அவ்வழிப் புகுந்து உய்யு மென்னுந் திருவுளக் கருத்தால் பாண்டியனுக்கு அணுக்கராய் அமைச்சுரிமை பூண்டு, அவனை உலக காரியங்கள் ஒன்றுந் தாக்காமல் யாவுந் தாமே வகித்து நடத்தி வருங்கால், அவ்வரசன் பகையின்றி வாழுநிலைமை அரிமர்த்தனன் என்னும் தன் பெயராலும் விளக்கு மியல்பினனு யிருந்தும் குதிரை வாங்கும்படி பெரும் பொருள் கொடுப்ப, இவன் இப் பெரும் பொருள் கொண்டு சிவ புண்ணியஞ் செய்துய்தலே முறையாம், பகையின்றி வாழும் இப்போது குதிரைப்படை அனுவசியமா மென்று நினையாது இப்பொருளைத் தந்தனன். இவனை அருள் வழிப் புகுத்தி உய்விக்க வந்த நாம் இப்பொருளைச் சிவ புண்ணியத்திற் செலுத்தி உய்வித்தலே பொருத்த மென்பதும், இப்பொருள் மட்டுமோ இவ்வரசுக்குந் தொன்றுதொட்டு வரும் இடையருத பாத்தியஸ்தர் ஸ்ரீ மீனுக்ஷி சுந்தரரே யாதலால் அவரது மதிப்படி செய்தலே நீதி யென்பதுந் திருவுளங் கொண்டு ஸ்ரீ மீனுக்ஷி சுந்தரர் திருச் சந்நிதிக்கு வந்து வேண்டி நின்று அநுமதி பெற்றுத் திருப் பெருந் துறைக்கு வந்து சிவகுரு தெரிசனமும் வேதசிவாகம விதி முறையே சிவதீக்ஷா திவ்ய ஞானுேபதேசமும் பெற்றுப் பணிந்து பரவசராய் நின்று பரவும் பொழுதும் அவர் திருவாக்கி லெழுந்தது அருள் வாக்குஞ் செழுந் தமிழ் மொழியே.

மாணிக்கவாசகர் திருவருளது மதிப்படியே

பொருள்க ளெல்லாமும் சிவப்பணி சிவனடியார் பணிகளாகிய சிவ தருமங்களி னுபயோகித்து விட்டு ஆன்ம நாதரைப் பணிந்து துதித்து நிற்ப ஆன்மநாதர் அவ்வரசனுக்கு உலகப் பொருளும் வாழ்வும் நிலையல்ல வென்பது நேரே காட்டி நிலை யுடைப் பொருள் பற்றி நின்றுய்யச் செய்வாராய் நரிகளைச் சிறந்த குதிரைகளாக்கி அவன் மகிழும்படி பகலிற் காட்டி அவைகள் அவ்விரவிலேயே நிலை யின்றி ஒழியவும், உலக வாழ்வு முழுதும் ஒழிக்கக் கூடிய பெருவெள்ளம் பெருகி வரவும் செய்து. இடையருப் பேரன்புக்கெளியரென்பது விளங்க மண் சுமந்தும் சர்வ வியாபக முழுமுதற் றலைவரென்பது விளங்க மாற்றடி பட்டும், அவ்வருட் செயல்கள் கண்டு அவ்வரசன் பரிபாக முற்ற பின்னரே மாணிக்கவாசகரது நிர்மல சிவத்துவ மகிமை யெல்லாம் தமது திருவாக்கால் விளக்கியருள உடனே அரசன் முன்னைப் பற்று முற்று மற்று உண்மைப் பொருளையே பற்றி நின்று மணிவாசகர் மலரடி பணிந்து, எம்பெருமானே, அடியேன் இவ்வரசியலைக் கமலபாத்திர சலம் போல ஒட்டாது நின்று நடத்தற்கரிய உண்மையறி வின்மையால் எனதெனப் பற்றி நின்று மாறி மாறி வரும் சுக துக்கங்களில் அழுந்தி மயங்கித் தேவரீர் அடியேனை யுய்விக்கவே வந்தருளி அமைச்சரெனச் சார்ந்து நின்று அம்முறையே செய்து வந்த அருட்செயல் களினுண்மை யறியாது தீங்கிழைத்த பெரும் பாதக ஞனேன். ஆதலால் இவ்வரசு நடத்தற் கருகனல்லேன்; தேவரீரே முழுதும் மேற்கொண்டு நடத்தி அம்முறையில் அடியேனையும் ஓரடிமையாகக்

கொண்டருள்க வென்று வேண்டவும், அவனது பரிபாக நிலே நோக்கி நன்மதி புகன்று நிறுத்தி விட்டுத் திருப்பெருந்துறை யடைந்து குருமூர்த்தியைத் தெரிசித் தின்புற்று அன்பு பெருக முன்பு நின்று நாடோறும் பாடியருளியது தேடருந் தமிழ் மொழியே.

மாணிக்க வாசகர் திருப்பெருந்துறையிற் சில காலமிருந்து குருமூர்த்தி பிரிவாற்ருது வருந்தி வேண்டியதும், அக் குருமூர்த்தி திருவடிகளைப் பற்றிக்கொண்டு பணிந்து கிடக்கும் தம்மை அவர் திருக்கரங்களாற் றூக்கி எடுத்தணைத்து இன்சொற் புகன்று தேற்றியருளித் திருப்பெருந்துறை மகிமை விளக்கித் திருவடி கொடுத்து இதனைப் பூசித்துக் கொண்டு சின்ஞளிங்கிருந்து பல தலங்கள் பணிந்து சிதம்பரத்துக்கு வந்து நமது திருவருள் பெற்று வாழ்க வென்றருளியதும், சிதம்பரத்துக்குந் திருப்பெருந்துறைக்கு முள்ள பொருத்தமிது வென்று வேட்டுவன் ஓரிடத்தெடுத்த புழுவை மற்ருேரிடத்து வைத்துத் தனது சாரூபங் கொடுத்துப் பேணுதலாகிய உவமான வாயிலாக விளக்கிச் சிதம்பர மகிமை தெரிவித்து, நீ செல்லும் தலங்களில் நமது இக் குருமூர்த்தி தெரிசனங் கிடைப்பிப் போமென்றருளிப் பிரிந்து சென்றருளியதும் முதலிய பற்பல அற்புத நற்பயனிற் பொலிசிற் பரவாசக முற்புகன்றருளியது அற்புமிக் கிலங்கும் பொற்புறு தமிழ் மொழியே.

மாணிக்கவாசகர், உத்தரகோசமங்கை யடைந்து, சிவ சந்நிதியிற் பணிந்து நின்று

குருமூர்த்தி தெரிசனங் கிடைக்கப் பெருமையால் எம்பெருமானே அடியேனை ஒதுக்கி விடுகின்றாயோ கைவிடாமல் எப்போதும் ஏற்றுக் கொண்டருள்க வென்னுங் கருத்தடைந்த நீத்தல் விண்ணப்பம் பாடி ஏத்தியருளியது தூத்தமிழ் மொழியே.

மாணிக்கவாசகர் அவ்வாறு பாடித் துதித்த வுடனே குருமூர்த்தி தெரிசனங் கிடைக்கப்பெற்றுச் சிலகாலம் அங்கு வசித்தருளிப் பின்பு திருவண்ணுமலை, திருக்கழுக்குன்ற முதலிய தலங்கள் பணிந்து, சிவபிரான் சீவர்கள் தத்தம் வினைப்பயன்களை அனுபவித்து வந்து சேஷமின்றி ஒழிந்தபின் முத்தியின்பம் பெற்றுய்தற்காகவே, தனு கரண புவன போகங்களைக் கொடுத்தலாகிய சிருஷ்டியாதி ஐந்தொழில்களைத் தமது சத்தியைக் கொண்டு செய்கின்ருனென்று ஆரிய வேதாகமங்கள் கூறு முறைகளைச் சீரிய திருவெம்பாவை முதலிய திருப் பதிகங்களில் தேற்றியருளியது போற்று சீர்த் தமிழ் மொழியே.

மாணிக்கவாசகர், தமது குருபர சிவாஞ்ஞையின் படி விரைந்து வந்து தில்லை எல்லை பணிந்து ஆராத காதலுடன் உட்சென்று திருவீதி வலம்வந்து திருக் கோபுர முன்பணிந்து சிற்சபை திருமுன்பு வந்து நடேசப் பெருமான் திருவுருவம் தமது குருவுருவ மாய்த் தோன்றக்கண்டு பரமானந்தங்கொண்டு பல முறை நிலமுறப் பணிந்து தம்மை மறந்து பரவச ராய்ச் சிவயோகந் திளைத்து நிற்கும் போதும், “ தில்லையாண்டானைக்கொண்டன்றே ” தில்லையில

மர்ந்து எல்லையில்லாத சேதனு சேதனப் பிரபஞ்ச முழுதும் தன்னடிமையும் உடைமையுமாக் கொண்டாடுகின்ற ஆண்டவனுகிய சிவபிரானை, என் செயல் முழுதும் நீங்கிவிட யாவும் தன் செயலேயாக முன்னின்றருளும்படி பெற்றுக்கொண்டமையாலன்றோ, "குனித்தடியேனுடுங்குலா" அவனைப் போல ஆனந்தக் கூத்தாடிக் குலாவுதலானது அடியேனுக்கு வாய்த்ததென்று அவரருட்டிருவாக்கிலெழுந்தது பொருட்டிருவாசகத் தெருட்டமிழ் மொழியே.

மாணிக்கவாசகர், தில்லையின் எல்லை கடவாது வீற்றிருந்தருளி மேலும் பற்பல அற்புதத் திருப்பதிகங்கள் பாடியருளியதும், புத்தர் கொடுமை நீக்கி மெய்த்தகு சைவ உத்தம நெறி தாபித்தருளும்படி அத்தனருளாற் சென்று முறையாகப் பல்வகை விரியச் சொல்வளந் தெரிய வாதித்தருளியதும், அவர்கள் நீதிகடந்து பிதற்றும் போது, சிவமே தாமாய்த் திகழ்ந்தருளும் உண்மையை யாவருங் கண்டுய்யும்படி, அப்புத்தர்கள் நாவிலிருந்து பேசுவிக்கும் சரஸ்வதியை நீங்கும்படி சிவாஞ்ஞை செய்ததும், அத்தனை பேரும் ஊமையாயொழிந்த பின் பிறவி தொடுத்தே ஊமையாயிருந்த அவ்வரசன் புத்திரியை நோக்கி, இப்புத்தர்கள் சிவபரத்துவ விரோதமாக் கூறுங் கேள்விகளுக்குச் சிவபரத்துவ தாபனம் விளக்கும் வேதசிவாகம விசேட வாக்கியங்களால் மறுமொழி கூறுகவென்று ஆஞ்ஞாபித்தருளி அச்சொன் மாத்திரையானே ஊமை நீங்கி அவ்வருண் மொழிகள் பேசும்படி செய்தருளியதும், பின்னர் அவ்வரசன் உண்மை

தெளிந்து சைவனுகிப் பணிந்து விபூதிபெற் றணிந்து மேலும் பணிந்து, அப்புத்தரும் உண்மை உணர்ந்து பணிந்துநின்று பேசமாட்டாது வருந்துதல் நோக்கி வேண்ட, அவர்களுக்கும் அருள்புரிந்து ஊமை நீக்கிஅருளி, அவர்கள் விரைந்து வந்து திருமுன் பணிந்து துதித்து நின்று வேண்ட விபூதி கொடுத்தருளி நல்லுபதேசஞ் செய்தருளியதும் வெல்லுசீர்த் தமிழ் மொழியே.

மாணிக்கவாசகர் பாடியருளிய தமிழ் வேத மாகிய திருவாசகங்களைச் சிவபிரான், அவ்வத் தலங்களில் அவ்வப்பொழுதே கேட்டிருந்தும், அவ் வினியசுவைக் கனிதமிழ்த் திருப்பாடல்களில் கொண்ட பேராசை மேலும் பெருகி எழலால், அம் மணிவாசகர் திருவாக்கினிடமாகவே பின்னரும் கேட்டின்புறத் திருவுளங்கொண்டு, பிராமணர்கள் தமிழ்மொழியில் அதிப்பிரியரென்பது காட்டவே பிராமணரூபராய், மணிவாசகர் வீற்றிருந்தருளு கின்ற பர்ணசாலைக்கு வந்து, அவர் திருக்கண் விழித்து எதிர்நோக்கும் வரை அவர்முன்னின்றருளி அவர் எதிர் நோக்கி நீவிர்யாவர் என்ற வுடனே அவர்க்குப்பிரிய முண்டாகும்படி பாண்டி நாட் டுள்ளேனென்று கூறி, மேலும் பலவாக்கியங்களால் அவரை உயர்த்தியும் தம்மைத்தாழ்த்தியும் பேசித் தேவரீர் பற்பல தலங்களிற் பாடியருளிய அற்புதப் பாடல்கள் முழுதும் எழுதிக்கொண்டு சென்று நியமபாராயணஞ் செய்துய்தற்காகவே வந்தேன் சொல்லியருளுக வென்று வேண்டி, அவர் ஆதி தொடுத்து அங்கங்கே பாடியருளிய திருவாசக முழுதும், அந்தந்தப் படியே அப்பொழுதுங் கூறி

யருள, அவையெல்லாந் தாம் பாடிய வேதத்தை யும் எழுதாத அருமைத் திருக்கரத்தால் எழுதி யருளி, அத்தமிழிலுள்ள பேராசை அம்மட்டிலும் அமையாது பெருகுதலால் மேலுந் திருக்கோவை யார் பாடியருளும்படி வேண்டி, அத்திருப் பாடல் களும் அப்பொழுதே பாடியருள வினவி மகிழ்ந் தெழுதியது இனிய பசுந் தமிழ் மொழியே.

மாணிக்கவாசகர் இவ்வாறு பாடியருளிய திருப் பாடல்கள் முழுதும் எழுதிக்கொண்டு சென்றருளிய சிற்சபேசர், அப்பாடல்களில் தமக்குள்ள பேராசை யை யாவர்க்கும் விளக்கி அன்பு வைத்துப் பரவி யுய்யச் செய்வாராய், சிற்சபையில் தம்மைத் தெரி சிக்க வந்து நிறைந்து நிற்கின்ற அரிபிரமாதி தேவர் முனிவர் யாவரையும் அமைந்திருந்து கேட் டுய்க வென்று ஆஞ்ஞாபித்து, நாம் பாடிய ஆரிய வேதமுதலியவைகளைக் காட்டிலும் நமக்கு அதிப் பிரியந்தருவது இத்தகு சீரிய தமிழ் மொழியே என் னும் உண்மை விளங்க அத் திருவாசகம் திருக் கோவையார் முழுதும், ஒவ்வொரு திருப்பாடலுந் தாமே ஆசை மிக இன்னிசையுடன் பாடியருளி அவ்வரும் பொருள்கள் விரித்தெடுத்தோதி விளக்கி யருளியது பெருத்தெழும் ஆர்வத்திருத்தமிழ் மொழியே.

மாணிக்கவாசகரது திருப்பாடல்களில் மேலும் மேலும் தொடர்ந்தெழும் ஆசை மேலிட்டினுல் நட ராஜப் பெருமான், அத்திருவேடுகள் எல்லாவற் றிற்கும், தமது செந்தளிர்புரையும் அந்துணைக் கரங்களால் மைக்காப்பிட்டு மிகப்பேணித் தமது

சிற்சபையில் வைத்தருளி, அதனைத் தில்லைவாழந்த ணர்களுங் கண்டுவியந்து மகிழ்ந்து பூசித்து முழு தும் படித்து முடிவில் "மாணிக்கவாசகர் சொல்ல, அழகிய சிற்றம்பல முடையார் எழுதியது" என் றிருப்பதுங் கண்டு மிக மகிழ்ந்து, மணிவாசகப் பெருமானைச் சிற்சபேசராகவே பணிந்து அத்திரு வாசகத் தரும்பொருள் கேட்டுய்ய விரும்பும்படி செய்தது கரும்பினு மினிமை தரும் புனிதத் தமிழ் மொழியே.

மாணிக்கவாசகர், தம்மைத் தில்லைவாழந்தண ரனைவரும் பணிந்து திருவாசகத்தின் தெளிபொருள் கள் விரித்தருள்க வென்று வேண்ட, அப்பொருள் தம்மாலுங் கூறுதற்கரிய தென்பது விளங்க அவர் களுடன் சிற்சபைக்கு வந்து திருமுன்னின்று, எப்போதும சிவத்தொடு திளைத்து வேறின்றிச் சித்தாந்த நிலைய சுத்தாத்துவித மெய்த்தகு கல்வி நித்தியானந்தமே துய்த்து வாழ்ந்திலங்கும தமது சொரூப நிலையினை யாவரும் நேரே கண்டுய்யும்படி ஸ்ரீ குஞ்சிதபத நிழலிற் புகும்பொழுதும் திருக்கரம் நீட்டிச் சிற்சபேசரை நேர் காட்டி, இதன் பொருள் சிவமே என்று திருவாய் மலர்ந்து மொழிந்தருளி யது செழுந் தமிழ் மொழியே.

முற்கூறியவாறு, நமது சைவ சமயாசாரியர் கள் நால்வரில் ஒவ்வொருவரும், இத் தமிழ் மொழித் திருப்பாடல்கள் பாடியருளியே பற்பல அற்புதச் செயல்கள் செய்து உலகெலா முய்வித் தார்கள், அவைகள் மேலும் பற்பலவுள்ளன. அன்றியும் தமிழ் என்னும் இனிய சொல்லையும் தமது திருப் பாடல்களில் அநேக இடங்களில்

விளங்க வைத்து, செந்தமிழ், பைந்தமிழ், தண்டமிழ், வண்டமிழ், இன்றமிழ், மென்றமிழ், நற்றமிழ் சொற்றமிழ் என்பனவாதிய பற்பல திப்பிய விசேஷ வாக்கியங்களால் அதன் மேன்மை தெரிவித்தருளினர்கள். அவையெல்லாம் எடுத்து விளக்கப் புகின் மிகப் பெருகு மாதலால் மேற்காட்டிய மட்டிலேயே சமயாசாரியர்கள் தமிழ் மொழியில் கொண்ட விருப்பத்தி னுண்மை செவ்வே தெளியலாம்.

கச்சியப்ப சிவாசாரியர் குமரகோட்டத்தில் அமலநாயகன் கமல நாண்மலர்ச் சேவடி போற்றும் பாவனமாதவர். இவர் ஆன்மார்த்த பூசனையுடன் உலகெலாமுய்யும்படி பரார்த்த பூசனையும் செய்யும் அதிகாரம் சதாசிவ முகமாகப் பெற்று வேதசிவாகம விதிப்படி சிவாலய நித்திய பூஜாதிகளும் பிராமணர் முதலிய நால்வகைச் சாதியார்க்கும் சிவதீட்சாதி சிவசமஸ்காரம் புரிந்து சைவராக்கி யுய்வித்தலும் செய்துவரும் சிவப் பிராமணர் குலத்தில் அவதரித்தருளி ஆரிய வேதாகமாதி அருணூல்களும் சீரிய திராவிட வேதமாதி தெருணூல்களும் திருவருளாற் செவ்வே தெளிந்து இரு மொழிகளையும் குரு மொழிகளாகவே பேணி வளர்த்து வந்தவர். இத்தகைய உத்தம சீலர் இருமொழியிலும் வல்லுநராயிருந்தும் குமரநாயகர் தமதருள் முதல் கொண்டு அதிப் பிரியராய்ப் பாடியருளியது பதினுயிரந் திருப் பாடல்களின் மேலுள்ள கந்தபுராண மென்னுஞ் செந்தமிழ் மொழியே.

குமர கோட்டத்தில் வீற்றிருந்தருள் எம் பெருமானும் இன்ப மீதுர அமிழ்தினு மினியதித்

தமிழ் மொழி யென்பதைத் தேவர் முனிவர்கள் யாவரும் தேர்ந்துய்யப் பற்பலவாய் அற்புதங் காட்டி ஏன்று கொண்டருளிய சான்றினுந் தேற்றுவர் ஆன்றவர் பலரே.

இனிச் சந்தானசாரியர் நால்வரில் முதல்வராகிய மெய்கண்ட சிவாசாரியர், உலகெலாஞ் சைவ நெறியி னுண்மை தெரிந்துய்தற்காகவே ஸ்ரீ பிரம வித்தியா நாயகி யம்பா சமேத சுவேதவனேசர் (திருவெண்காட்டீசர்) திருவருளால் திருவவதரித்தருளினவர், இம் மெய்கண்டதேவர் திருவடியே பற்றி முன்னைப் பற்று முற்று மற்று இவரது மாணுக்கர்கள் நாற்பத் தொன்பதின்மரில் முதல் மாணுக்கராய் விளங்கினவர் அருணந்தி சிவாசாரியர். இவர், பிரமன் முகத்து வந்த பிராமணர்களின்மேல், அப்பிரமனிலும் நான்கு படி உயர்ந்த அநாதி சைவனுகிய சதாசிவன் முகத்து வந்த ஆதிசைவர்களாகிய சிவப் பிராமணர் குலத்தில் திருவவதரித் தருளினவர், வேத சிவாகமாதி சகல சாஸ்திர பாரங்கதராய் ராஜோபசார வரிசைகள் பெற்று விளங்கும் விசேடத்தால் சகலாகம பண்டிதரென்னும் பிரசித்த நாமம் பெற்றவர். இத்தகு சிறப்பு வாய்ந்த மெய்த்தவப் பெரியார் தமது பரமாசாரியராகிய மெய்கண்ட தேவர் செய்தருளியதும் தமக்கு உபதேசித் தருளியதும் சிவாகம சாரமாயுள்ளதுமாகிய சிவஞானபோதச் செந்தமிழ் நூலின் அரும் பொருள் விளங்க விரித்துப் பாடியருளிச் "சிவஞானசித்தியார்" என்னுந் திருப்பெயர் தந்து உலகந் தொழ வைத்தது இலகுந் தமிழ் மொழியே.

இவ்வருணந்தி சிவாசாரியர், வேதசிவாகமாதி சகல சாஸ்திர சம்பந்நராயிருந்தும், தம்மை விடாது பற்றித் தன்னுருவமுங் காட்டாது மறைந்து நின்று பல்லூழி காலமாகத் தொடர்ந்து வரும் பெருவலி படைத்த ஆணவ மலவாதனையை ஒரு நிமிஷ நேரத்துள்ளே பார்வை மாத்திரத்தே வேரறக் களைந்தருளிச் சிவத்துவப்பேறு தந்தருளிய தமது பரமாசாரியராகிய மெய்கண்ட தேவரது பேருதவியும் அபார மகிமையும் நினையுந்தோறும் திருவுளங் கசிந்துருக அருள்வளஞ் சிறந்தொளிரும் அப்பரமாசாரியர் திப்பிய மலரடியில் இடையறாது செல்லும் பேரன்பின் பெருக்கத்தால் அவர் தமக்குச் செய்தருளிய பேரருட் பெருமையை எடுத்துப் போற்றத் தொடங்கிய போதும் அவர் திருவாக்கில் எழுந்தது சித்தாந்த சைவத் தெளிபொருள் நலனெலாம் உய்த்தாய்ந் துலகெலாமொன்றி நின்றுய்யத் தருபாவென மகிழ்ந் தொருவாதன்பர் போற்றிருபாவிருப தருள்வா யன்பியல் மருமாண்பிலக்குத் திருவார் தமிழ் மொழியே.

அருணந்தி சிவாசாரியர் மாணுக்கர் மறை ஞான சம்பந்த சிவாசாரியர். இவர் வைதிக சைவ மாண்புறு பிராமணர் உய்தரு குலத்திலுதித்தருளி, மறையாகம மாதிய வாய்மைநூன் முழுதும் தெளிதரத் தேர்ந்து வளர் சிவஞான மலிந்தொளிர் திறத்தால் மறை ஞான சம்பந்தரென்னும திருநாமம் வழங்கப் பெற்றனர். இவர் ஆரிய வேதாகம ஞானப் பெயரினரா யிருந்தும், தம்மை யடைந்த உமாபதி சிவாசாரியர்க்கு

நிர்வாண தீட்சாதி சிவ சம்ஸ்காரஞ் செய்து உபதேசித்தருளியது, சிவஞானபோதம், சிவஞான சித்தியார் இருபா விருபஃது அருள் வாய்மைத் தமிழ் மொழியே.

மறைஞான சம்பந்த சிவாசாரியர் மாணுக்கர் உமாபதி சிவாசாரியர், இவர் தில்லை மூவாயிரந் திருமுனிவர்களில ஒரு முனிவராய அருள் முனிவர் சிற்சபேசர், "அடியார்க்கு எளியன் சிற்றம்பலவன்" என்று தம்மை, ஏக வசனத்தால் தாழ்த்தியும், இவரைக், "கொற்றங் குடியார்க்" கென்று வெகு வசனத்தால் உயர்த்தியும், "முத்தி கொடுக்க" என்னும் வியங்கோளில் வேண்டுகோள் விளக்கியும் விதந்து பாராட்டப் பெற்றவர்.

வேதசிவாகம விதிப்படியே சிற்சபேச நித்திய பூஜாதி சிவப்பணி செய்யுந் தவமணியாகிய வைதிக சைவ மாண்புடைப் பெரியர். இத்துணைச் சிறந்த வித்தக சீலர், ஆரிய வேதாகம அருண்மொழி பேணி நின்றும், அதனினுஞ் சிறந்தது சீரிய நிலைமைச் செந்தமிழ் மொழியே யென்னும் உண்மை தெளிந்தமையால், தமது ஞானசிரியரை யடைந்து சிவ தீக்ஷா முறையி லுபதேசிக்கப் பெற்றது சுப தேசத் தமிழ் மொழியே.

உமாபதி சிவாசாரியர், இவ்வுபதேசம் பெறும் முன்பும் பின்பும் பாடியருளிய பீடுயர் நூல்கள், கோயிற்புராணம் 1 சேக்கிழார் புராணம் 2 நம்பி யாண்டார் நம்பிகள் சரித்திரம் விளக்குந் திருமுறை கண்ட புராணம் 3 திருப்பதிக்கோவை 4 திருப்பதிகக் கோவை 5 சிவஞானபோதம் சிவஞான

சித்தியார் முதலிய சித்தாந்தச் சுருதியுள் வைத் தாழந்திலங்கும் அரும் பொருள் விளக்கிப்பெரும் பயனளிக்கும் சிவப்பிரகாசம் 6 திருவருட் பயன் 7 போற்றிப் பஃறொடை 8 நெஞ்சுவிடுதூது 9 வினு வெண்பா 10 உண்மை நெறி விளக்கம் 11 கொடிக் கவி 12 சங்கற்ப நிராகரணம் 13 முதலியவைகளாம் இவைகள் திருவருள் பேணிப் பொருவரு மன்பு செய் தொருவருமின்புறற் குறிச் செயல் விளக்குந் திருத்தமிழ் மொழியே.

இவ்வாறே தொன்று தொட்டுச் சைவ நெறி விளக்கி உய்வுறச் செய்தருள் உத்தமப் பெரியார் மேலும் பற்பலர் சாலு மொழி யீதென்றே நூலு முறைகளுந் தந்து வைத்தருளியது முந்துமெய்த் தமிழ் மொழியே.

இனி வைஷ்ணவர்களின் ஆழ்வாராதியர் நாலாயிரத்தினு மேலாயிரத் தொகை பற்பலவாகப் பொற்புறப் பாடியது நற் பெருந் தமிழ் மொழியே. ஆழ்வார்கள் பாடிய நாலாயிரப் பாடல்களை விளக் கப் புகுந்த ஜீயர்கள் அப்பொருள் விளங்க முப்பத் தாறுயிரப்படி யென்பது முதலியவாக விரித்துரைத் தது வரத் தமிழ் மொழியே.

விஷ்ணு மூர்த்தியும் அமிழ்தினு மினியதித் தமிழ்மொழி யெனவே பேணும் அதிப்பிரியத்தால் தமது கோயிலையும் நீங்கி ஒரு தமிழ் வித்துவான் பின் சென்றருளச்செய்ததும் அன்பு துன்றருந் தமிழ் மொழியே.

முன்னாள் வைஷ்ணவர்களில் கல்வியிற் சிறந்து பிரசித்தி பெற்று விளங்கிய வில்லிபுத்தூராழ்வார்

என்பவர் ஏனைக் கல்வியாளரை, அக்கல்வியிற் றளராது மேலுஞ் செல்லும்படி நன்மொழி புகன்று ஊக்கஞ் செய்வதே முறையாயிருக்க, அம் முறை கைவிட்டுத் தமது கல்விச் செருக்கினுல் தம்மிடத்து வந்த வித்துவான்களுடன், வென்றவர் தோற்றவருடைய காதை யறுத்து விடுவதென்று பிரதிக்ஞை செய்து கொண்டு, வாதித்து, வென்று, அவர்கள் காதுகளை யறுத்து விடுதலைச் செய்துவருங்கால், சுப்பிரமணிய வரப்பிரசாதம் பெற்ருெப்புயர்வில்லாத் திருவருட் பெருஞ் செல்வராய் விளங்கும் அருணகிரிநாதர் முன்னும் வாதம்புரிந்து எவ்விதத்தினும் வெல்ல முடியாது தோல்வி யடைந்தும் பிரதிக்ஞை மாருது தமது காதை யறுத்துவிடும்படி சொல்லவும், அப் பரம சாந்தராகிய அருணகிரி நாதர் அவரை நோக்கி நீர் இதுவரை செய்து வந்த காதறுக்கும் பாதகத் தொழிலை இனி யெக்காலத்துஞ் செய்யே னென்று உறுதி கூறினுல் உமது காதை யறுக்காது விடுவேனென்று கூறி அவ்வாறவர் உறுதி கூறிய பின்பு தாம் குறித்த தலத்துக்குச் சென்றனர். அவ் வில்லிபுத்தூரார் பின்னொருநாள் வழிச் செல்லும்போது திருவண்ணமலையைப் பார்க்கப் படாதென்ற சிவத்துவேஷத்தால் தமது பல்லக்கின் சன்னலை மறைத்துக் கொண்டு சென்றனர்.

அது தெரிந்த அருணகிரிநாதர், "புரத்தை நர சிங்கத்தைப் போர்வேளைக் கூற்றை-எரித்தவர்க்குத் தாதனிலையோன் – விரித்தபுகழ்த் - தேன்கட்டுஞ் சோணகிரித் தேசிகனைப் போற்ருமல்-ஏன் கெட்டுப் போனுனிவன்" என்று பாடியருளினர் உடனே

அவர் கண்கள், அண்ணுமலையார் திருவருளால் கண்ணுகாமல் மறைந்து புண்ணுயிடர் விளைத்தன, மணி மந்திர மருந்து வகைகள் பற்பல செய்தும் பலிக்காமல், இது அருணகிரி நாதர் திருவாக்கால் வந்ததென்று பலர் கூறத் தெரிந்து தாம் கருதிய படியே திருவண்ணுமலையைப் பார்க்க முடியாத குருடராகவே அங்கு வந்து அருணகிரி நாதரைப் பணிந்து வேண்டி நிற்ப, அவர், நீர் செய்த சிவாப சாரம் சும்மா நீங்காது. சிவபரத்துவ விளக்கமான பெரு நூல் செய்து மனங் கசிந்துருகத் துதித்து வேண்டிஞற்ருன் அவ்வபசாரமும் நீங்கிக் கண்களும் ஒளி பெறுமென்று கூறியருள, அது கேட்ட வில்லி புத்தூரார் சிவாலயத்தையும் பார்க்கப்படா தென்று நெடுநாட் பழகி வந்ததுர்ப் பழக்கம் உடனே மாற வும், அப் பழக்கத்துக்கு முழு விரோதமாகச் சிவ நாமங்களைப் புகழ்ந் தெடுத்துக் கூறித் துதிக்கவும் மனம் இடந்தராமையால் கண்போன துன்பத்திலும் பெருந்துன்பங்கொண்டு வருந்தி நின்று, கண் பெறு தற்கு இவ்வழி யன்றி வேறெவ் வழியுமின்மையால் சிவஸ்துதி செய்தலே ஒருதலையாகத் துணிந்து, அவ்வாறு பாடத் தொடங்கி, யிடையூறின்றி நிறை வேறும்படி விக்கிநேசரைத் துதிக்கும் போதே கண் ணேய் சிறிது மாறக் கண்டு சிவனே அரிபிரமாதி யெத் தேவர்க்கும் மேலான மெய்த்தேவ னென்னு முண்மையே மேற்கொண்டு மேலும், அன்பு பெருகப் பாடிக்கொண்டு வர வரக் கண்ணொளி தெளிவுறு தலுந் தெரிந்து, சிவபரத்துவ விளக்கச் செம் பொருள் வாக்கியங்கள் இன்பமீதூர வைத்துக் கை கண்ட பொருளிதுவே யென மெய் கண்டு தேர்ந்து

பாரத முழுதும் பாடி முடித்தது பிடுடைத் தமிழ் மொழியே.

இன்னுமிவ் வைஷ்ணவர்களிற் கல்வியிற் சிறந்தார் பற்பலர் பாடிய அளவிலாயிரம் வளமிகு பாடல்கள், தளர்விலா தொளிருந் தனித் தமிழ் மொழியே.

இவ் வைஷ்ணவர்களிற் பன்னெடுங் கால முன்னேயோர்கள், ஆரிய வேதமானது நேரிய பொருளைத் தேரிய மொழியா தீரியல் பினதாய் உபசாரப் பொருள் உண்மைப் பொருள், இரண்டுந் தன்னுள் விரவக் கொண்டிருத்தலால், சக்கையுஞ் சாறுந் தன்னுள் விரவக் கொண்டுள்ள கரும்பு போல்வதாம். அவ்வேதத்திலுள்ள உபசாரப் பொருளாகிய சக்கையை நீக்கி, அதன் சாறுபோ லும் உண்மைப் பொருளிதுவெனத் தெளித் தெடுத்து விளக்கும் சாரமாயுள்ளது நமது தமிழ் வேதமே யாமெனக் கொண்ட துணிவினராய் ஆல யாதிகளில் சீரிய தமிழ் வேதமே முன்னோதுதலும் ஆரிய வேதம் பின்னோதுதலும் சீரிய தமிழ்வேத பாராயணஞ் செய்வோர்க்கு முன்னுபசாரமும், ஆரிய வேதபாராயணஞ் செய்வோர்கருப் பின்னுப சாரமும் செய்தலுமே அவ்வத் தகுதிக்குரிய முறை யென்று நியமித்து வைத்தனர். இம்முறை அவ் வைஷ்ணவர்களில் எவராலும் அசைக்க முடியாது, மேலுமேலும் அதி ஊக்கமும் அன்பும் பெருக நடந்து வருகின்றது. இவ்வருமை வாய்ந்த உரிமைச் செயலிற் பன்னெடுங்கால முன்னரே தொட்டு ஆரிய மொழியினு முன்னின்று விளக்கி வருவது சீரிய மகிமை சென்னின்ற தமிழ்மொழியே.

இத் தமிழ்வேதத்தை முன்னையோர் நியமித்து வைத்த முறைமையை யெக்காலத்தும் நழுவ விடாது பேணி முன்வைத்துப் போற்றி வருகின்ற வைஷ்ணவர்கள், அந்நியமம் பேணுது பின் வைத்துப் போற்றி வரும் சைவர்களாகிய நம்மவரினு மிகச் சிறந்த பேரன்பின ரென்பது தெளிவாம்.

விஷ்ணுமூர்த்தி, சிவபூஜாதிய திருத்தொண்டு புரிந்து சிவனருளால் பிரகிருதி மாயாபுவனத் தலைமை பெற்று வாழ்கின்றவர், இம்மாயைக்கு மேல் அசுத்தமாயா புவனங்களும் அம்மாயைக்கு மேல் சுத்தமாயா புவனங்களு முள்ளன, அவ்வப் புவனத் தலைவர்கள் உருத்திரர், மகேசுரர் முதலியர், யாவரையும் அவ்வத் தலைமையில் வைத்துப் பிறழாது நடத்தும் முழுமுதற்றலைவன், இவை யெல்லாங் கடந்த தத்துவாதீத சர்வ வியாபகனுய் நின்றருளுஞ் சிவனொருவனேயாம். இவ்வுண்மை தெளிய விளக்கும் சுருதி புராணேதிகாசாதி வாக்கியங்கள் பற்பல வுள்ளன. அவைகள் நமது- "வேதாந்தத் தெளிவு" முதலிய நூல்களில் எடுத்துக் காட்டப்பெற்றன. ஈண்டு விரிக்கிற் பெருகும். இவ் வைஷ்ணவர்கள் மேற்கூறிய பிரகிருதி மாயா புவன மட்டிலுள்ள ஏகதேசத் தலைமை பெற்று வாழும் விஷ்ணுமூர்த்தியை முழுமுதற் றலைவரெனக்கொண்ட திரிபுணர்ச்சி யொன்றுமே யன்றி நமக்குமேல் ஆண்டவனொருவனுளன். நாமெல்லாம் அவனடிமைகளே என்னுஞ் சுருதி தேர்ந்து ஆண்டானடிமைத் திறமே பேணி வழிபாடு செய்துவரும் செயல் வகைகளெல்லாவற்றுலும் சைவர்களாகிய நமக்கு அணுக்கர்களே யாவர். நாமே பிரமம், மற்றெல்லாம் மித்தையென்று வாசா

மாத்திரங் கூறி ஆணவ முனைப்படங்காது நிற்கும் மாயாவாதிகள் போல்வாரல்லர்.

விஷ்ணுமூர்த்தி, ஏகதேசத் தலைவரென்பதை வைஷ்ணவர்கள் கூறும் தத்துவ அளவினாலும் தெளியலாம. இவர்கள் மேற்கொண்டுள்ள தத்துவங்கள் பிருதிவி முதலாய இருபத்து நான்கேயாம். இதனை "ஆகின்ற தொண்ணுற்ரு றாறும் பொதுவென்பர் - ஆகின்ற வாருறருஞ் சைவர் தத்துவம் ஆகின்ற நாலேழ் வேதாந்தி வைணவர்க் காகின்ற நாலாறை யைந்துமாயாவாதிக்கே" என்றருளிய திருமந்திர வாக்குத் தெளிவிக்கின்றது, இவ்விருபத்து நான்கும் ஆன்ம தத்துவ மென்பதாம், இப்பெயரும், இதன் நிலைமையை விளக்கும். இவற்றின் மேலுள்ளது பிரகிருதி மாயை, இம்மாயா சொரூபியே விஷ்ணுமூர்த்தி, இப்பிரகிருதி மாயாபுவனம் பரமபதம். இதனையடைந்து விஷ்ணு சாரூபம் பெற்று வாழ்தலே பரமபத முத்தி யென்பதே வைணவ சமயநூற் கொள்கை. இதனையே வைணவர்கள் கையாண்டு வருகின்றனர். இம் முறையில் விஷ்ணுமூர்த்தி சுத்த மாயை அசுத்த மாயைகளின் கீழ், ஏகதேசமாகிய பிரகிருதி மாயா புவனத்தலைமை மாத்திர முள்ளவரென்பது தெளிவாம். இத்தகைய ஏகதேசத் தலைவராகிய விஷ்ணுமூர்த்தியை முழுத் தலைவரெனத் திரித் துணர்ந்த வைணவர்களும், தமது தமிழ் வேதப் பெருமை நன்குணர்ந்து ஆரிய வேதத்துக்கு முன் வைத்துப் பன்னெடுங் காலந் தொட்டுப் பேணி வருவது தெரிந்தும், முழுத் தலைவன் சிவனே யென்பதை யுள்ளபடி சுருதிப்

பிரமாண முகமாக நன்குணர்ந்து பற்றி நிற்கும் சைவர்களாகிய நம்மவர்கள் நமது தமிழ் வேதங்களையும் முன் வைத்துப் பேணுது பராமுகர்களாயொழிவதை யென்னென்று சொல்வது? அது நிற்க.

மேற் கூறிவந்த பற்பல வகையாலும் பன்னெடுங் காலத்து முன் னே யோ ரா கி ய சைவர் வைணவர் என்னு மிருவகைப் பிராமண ரெல்லாரும் இடையருது வளர்த்து வந்தது கிளத்து சீர்த் தமிழ் மொழியே. இம்மட்டோ மேலும் சிவானுபூதிப் பெருஞ் செல்வர்களாகிய சைவப் பெரியார் பற்பலரால் பண்டைக்காலந் தொட்டுச் செய்யப் பெற்று வெளிவந்த புராண காவிய பாஷியாதி பலவகையாய் விரிந்து விளங்கும் பெருந்தொகை நூலெலாம் அருந் தமிழ் மொழியே!

இக்காலத்திலும் இவ்விரு சமயப் பிராமணரில் இதனுண்மை யுள்ள படி யுணர்ந்த உ த் த ம ர் பற்பலர் புராணுதிய பலவகை நூல்கள் பாடுதல் உரை செய்தல், வெ ளி யி டு த ல், பிரசங்கித்தல் சபைகள் நிகழ்த்தல், முதலிய பு ல வ கை ச் செயலாலும் பேணி வருந் திறத்தது மாணிருத் தமிழ் மொழியே.

இத்தகு சிறப்பெலாம் வாய்ந்து விளங்கும் உத்தமத் தமிழ் மொழியே சிவபிரானுக்கும் அவன் அருள் வழி நின்று பூசித்து வந்து உலகத் தலைமை பெற்று வாழும் வி ஷ் ணு மூர் த் தி க் கு ம் அதிப்பிரிய மொழியாமென்பது தெளிவாயிருக்கவும் சில அதமப் பிராமணர்கள், நாம் பிராமண சாதியிற்

பிறந்த மேன் மக்களென் றெழுகின்ற அகந்தை வசத்தராய் உண்மை யுணருந் திண்மை யுணர் விழந்து நிற்றலால், தாங்கள் பிரமன் மூகத்து வந்தது போல க்ஷத்திரிய வைசிய சூத்திரரும் பிரமன் தோள் தொடை பாதங்களில் வந்தவர்க ளாதலால், அவர்களைத் தங்கள் கனிட்ட வரிசை முறையில் வைத்துப் பேணிக் கொள்ள வேண்டிய ஒழுங்கு தவறிச் சூத்திரக் கீழ்ச் சாதியினரென் றிகழ்ந்து பேசி யிடர்ப்பட்டு, முடைப்பட்ட போதெல்லாம அவர்கள் வாயில் காத்துப் புகழ்ந்து பேசி ஏவல் செய்து பொருள் வாங்கிச் சீவித்து வருகின்ற மாறுபட்ட நிலையர்களாயிருந்தும், தமது நிலைமையும் நோக்காது உத்தமப் பிராமணர் பலர் வேதசிவாகமாதி ஆரிய மொழியையும் இனிமை வாய்ந்த சீரிய தமிழ் மொழியையும் போற்றி வருதலையும், "ஞானத்தால் வீடென்றே நல்ல வாகமஞ் சொல்லுதலையும்" பிராமணோத்தமராகிய திருநீல நக்க நாயனர், தமது பூஜா மண்டபத்தில் ஓம குண்டத்தின் பக்கத்தில் திருநீலகண்ட யாழ்ப் பாண நாயனர் பத்தினியுடன் இரவிற்சயனிக்கஇடங் கொடுத்து அவ்விருவரும் அவ்வாறு சயனித்த பின் அக்குண்டத்தின் அக்கினி தானகவே வலஞ் சுழித் தெழுந்து, உயர்வு, மெய்யன்பின் செயல் வகைகளா லன்றிச் சாதியால் வருவதன் றென்று விளக்கிய அற்புதச் செயலையும், உற்று நோக்கும் உணர் வின்றித் தமது சாதியே பெரிதென்றிறுகப் பற்றி நின்று தமிழ் மொழியை இகழ்ந்து கூறிக் கொண்டு கோயிலுக்கு நேர்ந்து விட்ட பொலி யெருதுகள் போலத் தின்று கழித்துத் திரிகின்றனர். இவர்களை

மேற் கூறிய நலங்கள் ஒன்றையேனும் நோக்க விடாது தடுத்து மெய்த் தமிழ் நிந்தனை முதலிய பாதக வழியிற் புகுத்தி விட்டது, உத்தம முனிவர்கள் சத்திய வசனங்களாகிய சாபத்தால் வந்த பாவச் செயலேயாம். இதனை, "இத்யுக் தாவதத் விஜாந் வீக்ஷ்ய யக்ஞவாட முபாகதரந், யூயம் விப்ராத மாச்சர்வேஞ சாஸ்த்ரா சக்தமாநசா சிவத் ரோக பராந் நித்யம் சிவார்ச்சன பராங்முகா வேத மாக்கைக விமுகா: சிவப்பிரிய விநிந்தகா: நரகேஷு சர்வேஷு பததாத் யந்ததுக்கிதா:" என்று சங்கர சங்கிதை தக்ஷகாண்டம் 26 அத்தியாயம் 25, 26 சுலோகங்கள் விளக்குகின்றன.

இவற்றின் பொருள்; "அப் பிராமணர்களை நோக்கி, சிவநிந்தகனாகிய இத்தக்கன் யாகசாலையில் வந்திருத்தலால் பிராமண அதமர்களாகிய நீங்களெல்லோரும் வேதசிவாகம விரோதமான (குசாஸ் திரம்) இழிந்த சாஸ்திரப் பிரியர்களாய் நித்திய சிவத் துரோகிகளாய் வைதிக சைவ மார்க்க சிவ பூஜாதிகளில் பராமுகர்களாய்ச் சிவ பக்த நிந்தகர்களாய் எல்லா நரகங்களிலும் விழுந்து பெருந்துக்கமடையக் கடவீர்கள் என்பதாம். இது ததீசி முனிவர் கூறிய சாப வசனம். இங்குச் "சிவப்பிரிய நிந்தகா" என்றதனால் சிவனுக்குப் பிரியமான பொருள்களை அஃதாவது தமிழ் மொழி முதலியவைகளை நிந்திப்பவர்களாய் என்னும் பொருளுந் தருதல் காண்க.

"பேசரிய மறைகளெல்லாம் பராபரனீ யென வணங்கிப் பெரிதும் போற்றும், ஈசனையும் அன்பரையும் நீற்றெடு கண்டிகையினையு மிகழ்ந்து

நீவிர், காசினியில் மறையவரா யெந்நாளும் பிறந் திறந்து கதியுருது, பாசமதி னிடைப்பட்டு மறை யுரையா நெறியதனிற் படுதி ரென்ருன்". இது தத்சி முனிவர் கூறிய சாப வசனத்தைத் தமிழில் விளக்கிய கந்த புராணத் திருவிருத்தம். இவ்வதமப் பிராமணர்கள், ததீசி முனிவர் சாப மாத்திரமோ அவ்வாறே திருநந்தி தேவர், பிரம தேவர், துருவாச முனிவர், பிருகுமுனிவர், கௌதம முனிவர், கண்ணுவ முனிவர் முதலியோர் சாபமும் பெற்ற பாதகர்க ளாதலால் சிவப் பிரிய கரமானவைகளை நிந்தித் தொதுக்கி மீளா நரகத்துக்கு ஆளாகின் றனர். இதனை, "சிட்டர் புகழ் கைலைமலை காத் தருளுந் திருநந்தி தேவன் செங்கேழ், மட்டுறுபங் கயத்துறையு நான்முகத்தோன் றுருவாசன் மறை நூல் யாவும், தட்டறவே யுணர் பிருகு கௌதமன் கண்ணுவமுனிவன் ததீசி யின்ஞேர், இட்டபெருஞ் சாப மெல்லாம் பொய்த்திடுமோ வென வுன்னி யேகலுற்ருன்." என்ற கந்த புராணத் திருவிருத் தத்தாற் காண்க. இப்பெருஞ் சாபங்கள் பலவற் றுள்ளே ஒன்றன் விவரம் தெரிந்தாலே அப் பிராமணர்களின் கொடுஞ் செயல்கள் செவ்வே விளக்கமாம். ஆதலால் கௌதம முனிவர் சாபம் ஒன்றே விசாரிப்போம்.

தாருக வனத்திலிருந்த பிராமணர்கள் முன்னொரு காலத்தில் பஞ்ச மிகுதியால் மிக வருந்திக் கௌதமாசிரமஞ் சென்று வேண்டினர். அவரெல்லார்க்கும் அம்முனிவர் மிகச் சிறந்த போசனுதிகள் கொடுத்து ரக்ஷித்து வந்தனர். பன்னிரண்டு வருஷம் அவராதரவிலிருந்து திவ்

யான்னம் புசித்துச் சுகமாய் வாழ்ந்தனர். பின்பு எங்கும் மழை பெய்தது. பஞ்சம் நீங்கித் தான்யாதி விளைவு மலிந்தது. அப்போது அப் பிராமணர்கள் தாருகவனஞ் செல்ல விரும்பிக் கௌதமரிடம் தெரிவிப்ப, அவர் இன்னுஞ் சில காலம் இங்குச் சுகமாயிருங்கள் என்று கூறினர். அப் பிராமணர்கள் பின்பு ரகசியமாக ஒரு மாயப்பசுவை உண்டுபண்ணிவிட்டனர். அதனைக் கௌதமர் உண்மைப் பசுவென்று நினைத்து உணவு கொடுக்குங் கருத்தினராய்ப் பிடித்துக் கட்டப் புகுந்து தொட்டபோது அப்பசு விழுந்திறந்தது. உடனே பசுக்கொலை வந்துவிட்டதே யென்று வருந்துகின்ற கௌதமரை அப் பிராமணர்கள் நோக்கி நீர் பசுக்கொலை செய்த பாதகராகிவிட்டீர், இனி உமது அன்னம் புசிப்பது பாதகமாகுமென்று சொல்லிக் கொண்டு போய் விட்டார்கள். பின்பு கௌதமர் உள்ளிட்டு நோக்கி அப்பிராமணர் செய்த மாயமென்று தெரிந்து அவர்களைச் சிவநிந்தனை முதலியன செய்து மேலும் பெரும் பாதகர்களாய்ப் பிறந்திறந் துழலும்படி சபித்தனர். இச் சரித்திரம் கூர்மபுராணம் பூர்வ பாகம் பதினாறும் அத்தியாயத்தும், சூத சங்கிதை யஞ்ஞ வைபவ கண்டம் முப்பத்திரண்டாம் அத்தியாயத்தும் விளங்குகின்றது. பன்னிரண்டு வருஷ காலமும் இடையறுது பல்லாயிரவர்களாகிய தங்களுக்குப் பால் தயிர் நெய் முதலிய பெருக்கத்துடன் திவ்வியான்னம் கொடுத்துப் பாதுகாத்து வந்த பெருங்கருணைத் தாதாவாய்ச் சாபாநுக்கிரக சக்திமாநாயுள்ள மகரிஷிக்கே இப்பெருங் கேடு செய்த அப்பிராமணர்கள் மற்றிடங்களில் துணிந்து

செய்யும் அதிபாதக மகாபாதகங்களை விரிப்பா னேன். இப் பெரும் பாதகர்கள் சிவ நிந்தை சிவாக மாதி சிவ சாஸ்திர நிந்தை சிவனடியார் நிந்தை செய்தலால் அப் பொருள்களுக்கு ஒரு குறையு மில்லை. அதுபோல் இத்தமிழை நிந்தித்தலாலும் இதற்கு யாதொரு குறையுமில்லை. ஆனாலும் இவ் வதமப் பிராமணர் செயல் இத்தனையும் ஈண்டு விரித் தெழுதியது செல்வர்கள், இப் பாதகப் பிராமணர் களது வஞ்சகச் செயல்கள் தெரியாமல் இவர்களை உத்தமப் பிராமணர்களென்று நம்பித் தானமுதலிய வகையில் தம் பொருள்களைக் கொடுத்து அசத் பாத்திரத்திற் கொடுத்த பொருளானது விசாரியாது கொடுத்த தோஷத்தால் அப் பலனைக் கொடா தொழிதலுமன்றிக், கொடுத்தாரையும் வாங்கினாரை யும் நரகிற் புகுத்தி விடுமென்று சுருதி கூறு முறைப்படி நரகவேதனையுமாமே என்பது தெரிந்து இப் பாதகர்களை நம்பாது ஒதுக்கி விட்டுச் சத் பாத்திரந் தெரிந்து கொடுத்து வந்துய்தற்கேயாம்.

உள்ளபடி சிவ வேடம்பூண்டு சிவன் ஒருவனை யே பற்றி நிற்கும் உத்தமரே சற்பாத்திரராவர். அவர்க்குக் கொடுக்கும் பொருளே நற்பலனைத் தரும் வெளி வேடங்காட்டி வஞ்சித்தொழுகும் அதமர்க்குக் கொடுக்கும் பொருள் பலனின்றி ஒழிதலுமன்றி நரகமுந் தருமென்றதற்குப் பிரமாணம், "திலமத் தனை பொன் சிவஞானிக் கீந்தால், பலமுத்தி சித்தி பர போகமுந் தரும், நிலமத் தனைபொன்னை நின் மூடர்க் கிந்தால், பலமு மற்றேபர போகமுங் குன்றுமே." "கோல வறட்டைக் குனிந்து குளகிட் டுப், பாலைக் கறந்து பருகுவ தேயொக்கும், சீலமு

நோன்பு மிலாதவர்க் கிந்தது, காலங் கழிந்த பயிரதுவாகுமே." "ஈவது யோக மியம நியமங்கள், சாரவ தறிந்தன்பு தங்கு மவர்க்கன்றி, யாவ தறிந் தன்பு தங்காதவர்களுக், கீவ பெரும்பிழை யென்று கொள்ளீரே." "மண் மலையத்தனை மாதன மீயினும், அண்ண லிவனென் றஞ்சலி யத்தராய், எண்ணி யிறைஞ் சாதாரக் கீந்தாலிருவரும், நண்ணுவரேழா நரகக் குழியிலே," என்னுந் திருமந்திரங்களாலும், "இன்மைசா நெறி நின்றோருக் கேற்கு நற் கலங் கடப்மின், நன்மை சான்றவரே முக்கணுதனுக் கன்பு பூண்டோர், என்னுந் திருவிளையாடற் புராண முதலியவற்றாலுங் காணலாம். மேலும், திரவ்யம் ஹிஸதி தத்தம் ஸ்யாத் அக்ஷய்யி பலதாயகம், சுத்தி காயாம் ஹி முக்தாஸ்யாத், பயோவ்ருஷ்டுடம நசாந்யதா, விநியுக்தம் அஸத்பாத்ரே நபுஷ்கல பலாவஹம், பலந்திகிமு பீஜாநிக்ஷிப் தான்யூஷர பூமிஷு. என்னும் சூத சம்ஹிதா வசனத்தாலுங் காணலாம். இதன் கருத்து இப்பியில் விழுந்த மழை நீர்த்துளி முத்தாய் விளங்குகின்றது. பிற இடங் களில் விழுந்த துளி அப்படி யாவதில்லை யன்றோ அதுபோலச் சற்பாத்திரத்திற் கொடுக்கப்பட்ட திரவியந்தான் கெடாத நற்பலனைக் கொடுப்பதாம். உவர்ப் பூமிகளில் விதைக்கப்பட்ட விதைகள் பலனை எப்படிக் கொடுக்கும் பலனுமின்றி விதையும் அழிந் தொழியும், அதுபோல அசத்பாத்திரத்திற் கொடுக் கப்பட்ட திரவியம் பலனைக் கொடாதொழிதலு மன்றிப் பாவ வழியிற் சென்றழிந் தொழியும் எனபதாம்.

இனி மேற்கூறிய நிந்தகர்களை அதமப் பிராமணர்களென்றமையால் உத்தமப் பிராமணருஞ் சிலருளரென்பது விளக்கமாம்.

அவ்வுத்தமர்கள் இன்னுரென்பதை அவரவர் குணங் குறி செயல் வகைகளாற் செவ்வே தெளியலாம், அவையாவன:- சிவநிந்தை சிவனடியார் நிந்தை திருநீறு முதலிய சிவ சாதன நிந்தை வேத சிவாகம புராணுதி சிவ சாஸ்திர நிந்தை இதன் சாரமாய்த் தெளிவுற்று விளங்குகின்ற தேவார திருவாசகாதிய திருத்தமிழ் நிந்தை முதலிய துர்ச் செயல்கள் எக் காலத்திலும் மனசிலு மில்லாத சுத்தர்களாய்த் திருநீறு கண்டிகை முதலிய சிவ வேடப் பொலிவினராய்த் திருவைந்தெழுத் தோதும் திருநாவினராய் வேத சிவாகமாதிய திருவருணூல்கள் கூறு முண்மையே கடைப்பிடித்துச் சிவனொருவனே பரமபதியாகிய ஆண்டவன் அரிபிரமாதி தேவர் முதலிய சீவர் யாவரும் அவனடிமைகளே. நாம் சிவனொருவனையே இறுகப் பற்றி நின்று அவனருளாலே அவன்றுள் வணங்கி யுய்வதே நமது கடமை யென்று உறைத்து நின்று, "நங்கடம்பனைப் பெற்றவள் பங்கினன், தென்கடம்பைத் திருக்கரக் கோயிலான், றன்கட னடியேனையுந் தாங்குதல், என்கடன் பணி செய்து கிடப்பதே," என்பது முதலிய செந்தமிழ் வேத மந்திர வாக்கியங்கள் சிரமேற் கொண்டு தங்கள் தங்களாலியன்ற சிவனடித் திருத்தொண்டு பூண்டொழுகும் செந்நெறிச் செயல்களேயாம், இத்தகைய உத்தமப் பிராமணர்களும் சிலருளரென்று சர்வலோகமாதாவாகிய நமது பார்வதியம்மையார் திருவாய் மலர்ந்தருளினர்.

அது, இமயமலையில் பார்வதி தேவியார் தவஞ் செய்யுமிடத்துப் பிராமண ரூபியாய் வந்தருளிய சிவபிரான் முற்கூறிய அதமப் பிராமணர்களது வஞ்சச்செயல்களை யுள்ளிட்டு நோக்காது சிலர் வேட மாத்திரையானே நம்பி யுடுத்துபசரித்துப் பாழ் படாமல், உண்மையுணர்ந்துய்க வெனுந் திருவுளக் கருத்தால், அவ்வதமர் களடைந்தசாப நிலையைப் பார்வதி தேவியார் முகமாகவும் செவ்வே வெளி யிட்டு விளக்குபவராய்ச் சிவநிந்தை போலும் சிற் சில சொற்கள் கூறியருளினர். உடனே, அம்மை யார், திருவுளம் பதைத்துத் திருச்செவிகளைத் திருக் கரங்களால் மூடிக்கொண்டு, அச் சிவ நிந்தை செவி யுற்ற தோஷம் நீங்கும்படி சிவ சிவ என்னுந் திவ்ய மகா மந்திரம் பல முறை கூறியருளி, அவரை நோக்கிப் பிராமணனே! முன்னுளில் பல மகரிஷி கள் முகமாகப் பிராமணர்கள் சிவ பத்தியாதி நற் செயல்கள் இழந்து சிவநிந்தையாதி தீச் செயல்கள் புரிந்து பாதகர்களாய் மீளா நரகுக்காளாகும்படி பெற்ற சாபம் உன்னையும் மயக்கமாட்டாதோ? அப் பிராமணர்கள் செய்கின்ற யாகாதிகளுக்குத் தானொருவனே கர்த்தாவாய்த் தமது பிராமணச் சாதி முறையில் தங்களுக்கு உரிமைப் பிதாவாய்த், தம்மை யெல்லாம் பாதுகாத்து வருகின்ற முதல் வனுய்த் தங்களுக்கு இன்றியமையாச் சிறப்பினனுய் விளங்குகின்றவன் சிவன் ஒருவனே என்று வேத சிவாகமாதி மெய்ந் நூல்கள் விளக்குதலையும் நோக்காமல் அவனை விட்டு நீங்கி, அவனருளால் ஏகதேசத் தலைமை பெற்று வாழும் அரிபிரமாதி தேவர் பக்கம் சேர்ந்து, அதனுல், சொந்த நாயகனைக்

கைவிட்டு, அந்நிய புருஷரைச் சேர்ந்து இல்லொழுக்கங் கெட்டு விபசாரிகளா யிழிந்து திரிகின்ற பெண்களைப் போன்ற அப்பிராமணர்கள் செய்யும் நிந்தை முறையே நீயுஞ் செய்தாயாதலால் உன்னை யான் வெறுப்ப தென்னே என்று கூறியருளி, அம்மட்டிலமையாது உலகம் புரிந்த அருந்தவத்தால் மேலும் அவரை நோக்கி வேதியனே! முற் கூறியபடி தக்கன் யாகசாலையில் போசனப் பிரியர்களாய்ச் சென்றிருந்து பாதகமெய்திய அப் பிராமணருடன் சேராது சிவ பக்த சிரேஷ்டர்களாய்ச் சாபம் பெருது ஒதுங்கி நின்று எப்போதும் சைவ மார்க்கமே பேணிப் பரிசுத்த வேடமே தாங்கி உள்ளபடி சிவனடித் தொண்டுகளே செய்துவரும் உத்தமப் பிராமணர்களுஞ் சிலருளராதலால்; உன்னைக் கண்டவுடனே உனது விபூதி ருத்திராக்ஷ வேடப் பொலிவு வயோதிக மேன்மை முதலியன நோக்கி வணங்கி உபசரித்தேன். இச் சிவ நிந்தனுதி தீச் செயல்கள் முன்னமே தெரிந்தால் உட்புகுதவும் விடேன்; சிவ வேடம் வெளிக்காட்டி வஞ்சித்தொழுகும் உன்னைப் பார்ப்பதும் தீமையாதலால் நீ புறத்தே செல்கவென்று கூறியருளினர். இதனைக் கந்தபுராணம் தவங்காண் படலம் "முறைபடு சுருதியெல்லா மொழியினு மதுவே சார்பா, வுறுகிலராகிப் பொல்லா வொழுக்கமே பூண்டு முக்கண், இறைவனையிகழ்ந்து முத்தி யெய்திடா துழலமுன்னுண், மறையவர் பெற்ற சாப நின்னையு மயக்குருதோ." "தாதையாய்த் தம்மை நல்கித் தந்தொழிற் குரியனுகி, ஆதியாய்த் தங்கட்கின்றி யமைவுருச் சிவனை நீங்கி, ஏதிலார் பக்கமாகி யில்லொழுக்கிறந்தார்

போலும், வேதியர் முறையே செய்தாய் வெறுப்ப தெனின்னை யானே'' "ஆபினு மறையோர் தம்மி னருமறை முறையே வேடந், தூயன தாங்கி யெங்கோன் தொண்டு செய்வோரு முண்டால், நீ யவர் தன்மைத் தாயு நித்தனை யிகழ்ந்தாயென்னில், தீபவ ருனைப்போ லில்லை யவுணர்தந் திறத்து மாதோ." என்னுந் திருவிருத்தங்களாற் காண்க. மேற் கூறிய மகரிஷிகளுடைய சாப வசத்தராகிய அதமப் பிராமணாகள் அத்தியந்த சிவப் பிரீதிகர மான செந்தமிழ் மொழியை நிந்தனை செய் துழல் வது அவர்கள் முன்புரிந்த பாதகச் செயல் வகை யினியல்பே, அஃதம் மட்டி லொழிக.

இனி, அநாதி சைவனுகிய சதாசிவ முகத்து வந்தவாகளும், சிவ பிரானுக்கு உவந்தனவெல்லாம் இன்னின்ன வென்று வேத சிவாகமங்களால் நன் குணர்ந்தவர்களும், அவ் வழியிற்றவரு துஉள்ள படி அதிப் பிரியராய்த் தொன்று தொட்டு நின் றொழுகுகின்றவர்களும், ஆதி சைவர்களுமாகிய உத்தமோத்தமப் பிராமணர்களிற் சிலர், மேற்கூறி ஒதுக்கிய சாபப்பிராமணர் சகவாச தோஷத்தாலோ, வேறு யாது காரணத்தாலோ, சிவனு வந்தருளுந் தவ நிறைந்திலகும் அருந் தமிழ் மொழியில் வருந் துவேஷத்தால், தமது சைவ நிலை விளக்கும் தெய்வத் தமிழ் வேதங்களையும், தமது சொல் வாய்க்குமிடங்களில் முற்பட்டு நின்று பிற்பட ஒதுக்குகின்றனர். இது சிவாகம விதி விரோத மென்பாரைச் சினந்து ஆரவாரஞ் செய்கின்றனர். இப் பெருங் கொடுமையை என்னென்று கூறுவது. இவர்களில் எல்லாருமே நூலுணர்ச்சியற்றவரல்லர்.

சிலர் தங்கள் மரபுக்குரிய சிவாலய பூஜாதிகளுக்கு வேண்டிய அம்மட்டிலாவது நூலுணர்ச்சி யுள்ளவர்களே. இவர்களுக்குச் சிவாலயாதிகளில் வேத பாராயணாதி நியமமேயன்றி அதனேடொப்பத் தமிழ் வேதங்களாகிய தேவார திருவாசகாதி பாராயண நியமங்களில்லா தொழிந்தால், அது பரம சந்தோஷம் போலும். இதனை இவர்கள் இத் தமிழ் வேதங்களை ஒதுக்கியும் வாதித்தும் வருஞ் செயல் வகைகளால் யாவருஞ் செவ்வே தெளியலாம்.

இத் தமிழ் மொழியில் மாருத் துவேஷம் முறுகி வளர்தற்குக் காரணம் இதனைச் சூத்திர பாஷை என்றே கூறி ஒதுக்கி வரும் பாதகமே யன்றி வேறில்லை, வேதாகமாதி வடமொழியைப் பிராமண பாஷை யென்றும் இத் தமிழைச் சூத்திர பாஷை யென்றுங் கூறுமிவர்கள், க்ஷத்திரிய வைசிய பாஷைகள் இவை என்றும் மனம்போனபடி கூறுவர் போலும். எல்லாப் பாஷைகட்கும் சிவனே கர்த்தா, அவன் சம்மதமின்றி எந்தப் பாஷையும் நடைபெற வில்லை. இது சேரர் பெருமானுக்குச் சிவபிரானே மிருக பக்ஷியாதி சகல பாஷைகளும் தெரிவித்தருளிக் கழறிற்றறிவார் என்னும் பெயர் விளங்க வைத்தருளினதனுலும் நன்கு தெளியலாம் இவ்வுண்மை நோக்காது தமிழைச் சூத்திர பாஷை என்னும் துவேஷிகள் தன்னேடொத்த மகரிஷியாகிய அகஸ்தியர்க்குத் தமிழுணர்த்தி யருளிய சிவபிரானையும் சூத்திரனென்று கூறி ஒதுக்கிய பாதகராவரன்றி வேறில்லை. இது நிற்க.

இவ்வுண்மைகளை உற்று நோக்குதற்குத் தமது ஊழ்வலி யிடந்தராவிடிலும் தங்கள் அதி பரிசுத்த ஆதி சைவ மரபில் வந்தருளிய பன்னெடுங்கால முன்னையோராகிய கச்சியப்ப சிவாசாரியர் அருணந்தி சிவாசாரியர் சிவாலய முனிவர் முதலிய சிவாநுபூதிப் பெருஞ் செல்வர்கள் ஆரிய வேத சம்பந்நர்களாயிருந்தும், அவ் வேதத்துள்ள உப சாரப் போலித் தலைவர்களாகிய அந்நிய தேவர்களை ஒதுக்கி மகாதேவனாகிய சிவனொருவனே உண்மைப் பொருளென்று தெளித் தெடுத்து விளக்குவது தேவார திருவாசகாதிய சீரிய தமிழ் வேதமே யென்னும் உண்மை கண்டு சிரமேற்கொண்டு பேணி நித்திய நியம பாராயண சிந்தனாதிகள் செய்து, அத்தகைய அதிமாதுரிய அருஞ் சுவையே தருந் தமிழ் நூல்கள் செய்து உலகுய்யத் தந்தருளிய நலனையும் நோக்காது, அவ்வருந் தமிழ் வேதங் களைப் புறக்கணித்து ஒதுக்குதலால், இவர்கள் அம் முன்னையோராகிய திருவருட் பெருஞ் செல்வர்களைக் காட்டிலும் தாங்கள் அதியூக புத்திமான்களென் றெண்ணிக் கொண்டு அவர்கள் தமிழ் வேதங்களைப் பேணியது மூடத்தன மென்றொதுக்குகின்ற பாத கத்துக் காளாகின்றார்கள். சிவாநுபூதிப் பெருஞ் செல்வர்களாகிய முன்னையோர் கொள்கையும் அநு சரியாது தாங்கள் பிடித்ததே சாதிக்கும் முருட்டுப் பிடிவாதப் பெருநோய் இறைவன் தண்டனை மருந் தாலன்றித் தீராது. நிற்க.

சிவாலயங்களில் நித்திய நைமித்திக பூசனை கள் நடந்த பின் யசுர் வேத முதலாக வேத பாரா யணமும், அதன்பின் தமிழ் வேத பாராயணமும்,

அதன்பின் வாத்திய நிருத்த ஆலத்திகளும், அதன் பின் ஆசீர்வாதமும், அதன்பின் விபூதிகொடுத்தலும் செய்கவென்று சிவாகமம் விதித்திருக்கிற முறைப் படியே பிரபல ஸ்தலங்களில் தொன்றுதொட்டு நடந்து வருகின்ற வழக்கமும் நோக்காது, முருட்டுப் பிடிவாதக் குருக்கள்மார் சிலர், தங்கள் சொல் வாய்ப் புள்ள சில கோயில்களில் இவ்விதி முறையை மாற்றித் தேவார பாராயணம் பிற்பட ஒதுக்கி விட்டு அம்மட்டிலு மொழியாமல் முற்படக் கூறும் படி விதித்த சிவாகம வாக்கியமும் பொய் என்று கூறுகின்றனர். காமிகாகமம் மண்டபார்ச்சன விதிப்படலத்தில், முதலில் யசுர் வேதமும் பின் இருக்கும்பின் சாமமும் பின் அதர்வணமும் ஓதிய பின் "த்ராவிடாத்யயநம் பச்சாத் வாத்யந்ருத்தம் ததத்பரம், நீராஞ்சனம் ததத் த்ருத்வா ஆசீர்வாதம் ஸமாசரேத், பக்தாநாம் பஸ்ம தேயம் ஸ்யாத் ஸதா சுபகரம் பவேத்" என்னும் வசனம் பல நூற்றுண்டு களுக்கு முந்தின ஓலை ஏட்டுப் பிரதிகளிலிருக் கின்றன.

முன்னர்த் திருநாகேசுர சிவாலய மகா கும்பாபிஷேக காலத்தில் யாகசாலையில் பூஜானந்தரம் தேவாராதிய திராவிட வேதங்கள் சொல்ல வேண்டுமாளுல் ஆசீர்வாதத்தின் பின்பு தான் சொல்ல வேண்டும் என்று அக் கோயில் பூஜகர்கள் பருத்தியூர் சுப்பிரமணியக் குருக்கள் முதலியோரைப் பக்கத்துணையாய்க் கொண்டு தடுத் தார்கள். அத் திருக்கோயில் மூவர் தேவாரமும் பெற்ற சிறப்பினதென்று பற்றி நின்று திருப்பணி

செய்து கும்பாபிஷேகம் நடத்துகிற கர்த்தாவாகிய அரிமழம் அ. அரு. அண்ணாமலை செட்டியாரவர்கள் ஆ! ஆ! நாம் இத் தேவாரப் பெருமையாலன்றோ இத் திருப்பணி செய்ய வந்தோம். இவ்வரிய தேவாரத்தைச் சிவாகம விதி விரோதமாகப் பிற்பட ஓதுக்குகின்ருர்களே யென்று, வருந்திப் பலமுறை நயந்து இதங்கூறியும் தங்கள் பிடிவாதமே சாதித்தார்கள். அதன்மேல், மேற்படி யாகசாலாதி முக்கிய சிவ காரியங்கள் வகித்து நடத்த வந்த அமராவதி புதூர் வயி. நாக. ராம. அ. வெ. வேங்கடாசலச் செட்டியாரவர்களும், தேவகோட்டை தி. அ. சு. அ. சுப்பையா செட்டியாரவர்களும், ஆசீர்வாதத்துக்கு முன்புதான் தேவாரம் ஓத வேண்டுமென்ற சிவாகம விதி விளக்கிய பத்திரிகைகள் காட்டியும், பற்பல சிவாலயங்களில் இம் முறையே நடந்து வருகிற வழக்கங்கள் தெரிவித்தும், மேலும் பல இதவசனங் கூறியும் இணங்காமையால், சுப்பையா செட்டியார் பூஜா காலந் தாமதிப்பது நோக்கி, வேதமும் படிக்க வேண்டாம் தேவாரமும் படிக்க வேண்டாமென்று தீர்மானித்தார்கள். தனக்கு மூக்குப் போனாலும் போகட்டும் எதிரிக்குச் சகுனத் தடை நேரவேண்டியதே அவசிய மென்னுங் கொள்கையர் போலப் பிடித்ததே சாதிக்கும் அப் பூஜகர்கள் அவ்வொரு காலப் பூஜையை வேத பாராயணமுமின்றி முடித்தார்கள். அவ்வன்கண்மையை மாற்றி ஒழுங்காய் நடத்தப் புகுந்தால், பூஜாகால தாமதமாகிறதென்ற அவசர நோக்கத்தால், மேற்படி கர்த்தா முதலியர் அவ்வொரு நேரப் பூஜை அவ்வாறு முடித்த பின், மற்றை ஏழு காலங்

களிலும் பூஜை முடிந்து வில்வார்ச்சனை நடக்கும் போதே தேவார திருவாசகாதி தமிழ்வேத பாராயணஞ் செய்விப்ப, அதன்பின்னரே கற்பூர தீபமும் வேதபாராயண ஆசீர்வாதமும் நடந்து வந்தன. இம் முறையே மகா கும்பாபிஷேக முதலிய எல்லாமும் சிறப்புடன் நடந்தன.

இவையெல்லாம் நேரே கண்ட மாயூரம் ஆகம பாடசாலை ஆசிரியர் வைத்தியநாதக் குருக்கள் முதலிய சிலர், வேத பாராயணத்தின் பின்னருங் கூட நமது ஆசீர்வாதத்துக்கு முன் தேவாரம் ஓதப் படாதென்று வற்புறுத்திய நமக்கு முன்னரே தானே, கும்பாபிஷேக கர்த்தா முதலிய செட்டிப் பிள்ளைகள் வேதபாராயணத்துக்கும் முன்னாகவே தமிழ்ப் பாடல்களை ஓதச் செய்து விட்டார்களே!! ஐயோ சூத்திரர்கள் பாடுந் தமிழ்ப் பாட்டு நமது ஆசீர்வாதத்துக்கும் வேத பாராயணத்துக்கும் முன்னர் நடந்து விட்டதே! என்றும் நமக்கு இந்தச் செட்டிகள் தாக்ஷிண்யம் வேண்டி யிருத்தலால் அதனை மாற்ற முடியவில்லையே என்றும், இப்போது இத் தலத்தில் வேதத்துக்கும் முன்னரே தேவாரம் படித்த முறையே எங்கும் வழக்கமாக வந்துவிடுமே என்றும் கொண்ட கவலை மிகுதியால், நமது குருக்கள் பிள்ளைகட்கு இத் தமிழ்ப் பாட்டுக்களைப் படிப்பித்து இனி நடக்கும் கும்பாபிஷேகங்களில் செட்டிகள் கருத்தின்படி வேதம் படித்தபின் நமது பிள்ளைகளைத் தேவாரம் படிக்கச் செய்தாவது, அதன்பின் ஆசீர்வாதஞ் செய்ய வேண்டுமென்று திருவுள்ளங் கொண்டார்களாம்.

இதனுல் இவர்கள், சிவாலயாதிகளில் தேவார பாராயணஞ்செய்துவருகிறவர்கள் சூத்திர ரென்றும் அச்சாதி யிழிந்ததென்றும், அவர்கள் படித்தலை நாம் எதிர்பார்த்துக்கொண்டு அதற்காகத் தாமதித் திருந்து, அது முடிந்த பின் நாம் ஆசீர்வாதஞ் சொல்வது நமது உயாந்த சாதி நிலைமைக்கு விரோதமென்றுங் கருதியே, தமது சாதிப்பிள்ளை களைத் தேவாரம் படிப்பிக்க நினைத்தன ரன்றி விசு வசித்தன் றென்பது தெளிவாம். எப்படியாயினும் இவர்கள் தேவாரம் படிப்பிக்க நினைத்ததே பழம் நழுவிப்பாலில் விழுந்தாற் போலாயது.

இவர்கள், தேவாராதி படிக்கிறவர்களைச் சூத்திரரென்று இழித்தொதுக்கிய பழித்திறனை நோக்குங்கால், சாதியினும் சிவதீக்ஷையே உயர் வென்று நால்வகைச் சாதியரும் அநுலோமர் முதலி யரும் தீக்ஷைக்குரிய ரென்றும் தீக்ஷை பெருதவர் உயர்ந்த சாதிய ரெனினும், தீக்ஷை பெற்ருரை ஒவ்வாரென்றும் சிவதீக்ஷைக்கே உயர்வு கூறுகின்ற சிவாகம வசனங்களையும், இழித் தொதுக்கிய தோஷத்துக் குரியராகின்ருர்கள். இனி சிவ தீக்ஷை பெற்ருே பெருமலோ பிராமணரிலும் சிலர் தேவாராதிகள் ஒதிவருகின்ருர்கள், இவர்களை, தமிழுக்குக் குறை கூறுகின்றவர்கள் எந்த நிலையில் ஒதுக்குவரோ? அஃதிருக்கட்டும். பெரும்பாலும் தேவாராதிகள் படிக்கின்றவர்கள் சிவாகமங்கள் விசேஷித்துக் கூறுகின்ற சமயவிசேஷ நிர்வாண தீக்ஷை ஆசாரியாபிஷேகம் பெற்றவர்களே. இவர் கள் தொன்றுதொட்டு வந்த சுத்த மரபினர்களே. இத்தகைய உத்தம சீலர்கள் சிவாகம நெறியே

பேணி நிற்கின்றவர்க ளென்பதும் நோக்காது, சூத்திர ரென்று இழித்துக் கூறுதலுமன்றித், தேவார திருவாசகாதிய தமிழ் வேதங்கள், வேத சார திவ்ய மந்திர மயமாயுள்ளன வென்னும் மகிமை யும் நோக்காது, இவை சூத்திரர் வாயில் வருதலால் சிவப் பிராமணர்களாகிய எங்கள் வாயில் வரும் ஆசீர்வாதத்திற்குப் பின்னிற்க வேண்டியதேயன்றி முற்படக் கூறப்படாதென்று சாதிக்கின்ருர்கள்.

சாதிக்கின்ற இவர்கள், மகோற்ச வாதிகளில் திக்குபந்தனஞ் செய்யத் தொடங்கி, ஒவ்வொரு திக்கிலும் அந்தந்தக் கிரியாமத்தியில், சூத்திரரினும் கீழ் உள்ள சாதியினராகிய அசுத்தபோசனுதி அனு சாரமுடையாரை மத்தள வாத்ய நிருத்தங்கள் செய்யும்படி சொல்லி, அவர்கள் அவ்வாறு செய்த பின் அக்கிரியையைப் பூர்த்தி செய்வதென்னையோ? இதனில் ஒரு பெரும் பாதகம் பின் வருதல் காண்க சிவாலயங்களில் நிருத்த முதலிய தொண்டுகள் ருத்திரகணிகையர்களே செய்யத் தக்கதென்று விதித்த சிவாகம விதிக்கு முழு மாருக மேற்கூறிய அநாசார மாத்திரமோ, பெருஞ் செல்வர்களாகிய பல புருஷர்களைப் பலவகை வஞ்சனையாலும், மோக மருந்து முதலியவைகளாலும் மயக்கி வலிந்திழுத்து வசப்படுத்தி அப்புருஷர் ஏதேனும் ஓர் அவசர காரிய நோக்கிப் போய்வரக் கருதினும் அப்போது அழுத முகமுங் கண்ணீருங்காட்டி அவருடன் தொடர்ந்து புறத்து வந்து அவர் போகும் போதும் அவரையே நோக்கிக் கண்ணீர் ஒழுக்கிநின்று, அதற்கு முன் வந்துபோன மற்ருெரு புருஷர் அச் சமயம் எதிர்வர, "போனவர்க்கழுத கண்ணீர் புகுந்

தவர்க் குதவிற்றன்றே" என்றபடி வந்தவரை நோக்கி என்பிராண நாயகரே நீங்கள் பிரிந்து சென்ற அன்று முதல் உங்கள் நல்வரவையே நோக்கிக்கொண்டு கண்ணீருங் கம்பலேயுமாக இத்தெருவிலேயே நிற்கின்றேன் என்பது முதலிய பொய்மொழிகள் கூறி, "வண்ணமாற்றுப்பசும்பொன் வாங்குதற்கு நம்மவர்செய், கிண்ணமாற்றுக் கதையுங் கேட்டிலேயோ" என்று தாய்க்கிழவி உபதேசித்கிறபடி கிண்ணமாற்றுச் செயல் முதலியன செய்து அப்புருஷர்களின் பத்தினிகளேக் காட்டிலும் பேரன்புடையார் போல நடித்து 'ஒருகாலத்தும் நீங்காத உரித்துடையரென மிகப் பணிவு காட்டி நடந்து. ஒவ்வொரு விசேஷ காலங்களிலும் அப்புருஷர்களே தம் பொருள்களே வலிந்து வந்தளிக்கப் பெற்றும், அப் பொருள் முற்றும் ஒழித்த பின்னும் அப்புருஷர்கள், தமது உத்தம பத்தினிகளின் அணிகலன்திகள் விற்றும், வீடு விளே நிலம் முதலியன விற்றும், ஒற்றி வைத்தும் தரும் பொருளெலாம் பெற்றும் இனி எவ்வழியினும் பொருள் வருவாய்க் கிடமில்லே என்று தெரிந்தபின். அப்புருஷர்களே நம்மிடத்துள்ள மோகத்தால் செய்யாதனவெல்லாஞ் செய்து பன்னெடுங்காலம் பொருள் தத்து வந்தவரன்றோ வென்றெண்ணி முன் போல வாசாமாத்திர உபசாரம் பேசுதலேனுமின்றிக், கடுஞ்சொற் கூறி வீட்டு வாயிலின் பக்கத்திலும் வாராதபடி வைது தம்மை எப்போதும் நினேத்துக் கொள்ளும்படி கிரந்தி வெட்டை சூலே முதலிய நீங்கா நோய்களேக் கொடுத்து வேப்பிலேயுங் கையுமாய் அலேயும்படி

வெளியே துரத்தி விடுகின்ற மகாபாதகிகளாகிய வேசிகளை அக் குருக்கள்மார் அதிப்பிரியமாகப் பார்த்து இன்ன தாளம் ராகம் நிருத்தம் செய்க வென்று கூறி அவ்வேசிகள் முதலியர் அப்பாடலாடல்கள் செய்யும்வரை எதிர் பார்த்துக்கொண்டு தாமதித்து நின்று அதன் பின்பே தங்கள் மந்திரக் கிரியாபூசனுதிகள் பூர்த்தி செய்கின்றுர்களே, இவ் வசுத்த போசனுதி அநாசார பிண்டங்களாகிய வேசிகள் முதலியரைத் தங்களினுமேலான சாதியின ரென்றெண்ணித்தான் அவர்களாடல் பாடல்களின் பின்பே தங்கள் செயலைப் பூர்த்தி செய்கின்றுர் களோ? இச் செயலில் அதிப்பிரியர்களாய் எவ்வித கலகமுமின்றிச் செய்து வருகின்ற இவர்கள், பரம் பரைச் சுத்த மரபினராய்ச் சிவாகமோக்த சிவ தீக்ஷாதி சிவசம்ஸ்காரச் சிறப்பெல்லாம் பெற்ற சிவபூஜா துரந்தரர்களுந் திராவிட வேத பாராயண சீலர்களுமாகிய உத்தமர்களைத் தாழ்ந்த சாதியின ரென்றும், அவர்கள் தேவாரம் எங்கள். ஆசிர்வாதத் துக்கு முன்வரப்படா தென்றும் கூறி விதி முகமாக இதஞ்சொல்வாரையும் சினந்து பேசிக் கலகமே விளைக்கின்ற இவர்கள் அநீதியை அவ்வக் கோயி லதிகாரிகள் கண்டித்து மாற்றிச் சிவாகம விதி தவருது நீதி முறையில் நடத்துவாராக.

திருப்பணி கும்பாபிஷேகாதிகள் செய்யும் சிவதரும சீலர்கள் மேற் கூறப்பட்ட சிற்சில குருக்கள்மார்கள் முதலில் மிக இனியராய்ப் பேசி நெருங்கின சமயம் தாங்கள் பிடித்ததே சாதிக்கும் அநீதியினராதலால் முன்னரே தானே தேவாராதி களைப் பிற்பட ஓதுக்காமல் சிவாகம விதி முறை

யில், இன்னின்ன விஷயங்கள் இன்னபடிதான் நடத்த வேணுமென்று பேசி எழுதி வாங்கிக் கொண்டு திருப்பணியாதிகள் தொடங்கிச் செய்வாராக. அதற்கு அவர்கள் இணங்காவிட்டால் அக்கோயில் திருப்பணி பின்னராகட்டுமென்று ஒதுங்கி வேறு கோயிற்பணிகள் செய்தலே நலமாம். குருக்கள் எப்படிச் செய்தாலென்ன நாம் திருப்பணி கும்பாபிஷேகம் செய்து விடுவோமென்ற நோக்கத்துடன் செய்வது, மேலும் அவர்கள் தமிழ் வேத நிந்தனுதி சிவாகம விரோதம் செய்தற்கிடமாய்த் திருப்பணியாதி சிவதருமங்களை யேற்றுக்கொண்டு அதற்குரிய பலனைத் தருகின்ற சிவபிரானுக்கு அப்பிரியத்தைச் செய்வதாய் முடியுமாதலால் முதலில் குருக்கள்மார் நிலைமை தெரிந்து கொண்டே கோயில் திருப்பணியில் புகுதல் முறையாம். திருப்பணியாளரும் கோயிலதிகாரிகளும் இவ்வுண்மை கவனித்துச் சிவாகம விரோதம் வாராதபடி கண்டித்து நன்னிலைப் படுத்துவதில் ஒருவாறு பராமுகர்களாயிருந்தாலும், உள்ளும் புறமும் தெரிந்துநிற்கும் சர்வஞ்ஞ பரமபதியாகிய சிவபிரான் மறந்து விடுவதில்லை.

"நெறியுளார் செல்வம் பெற்றால் நெறிநின்று நீடுவாழ்வார், அறிவிலார் செல்வம் பெற்றால் அளவிலா அகந்தைப்பேயும், பிறிதுகண்டெரியா நோயும் பிடித்திடு மவற்றைமாற்ற, வறுமையே தண்டமென்னு மிரண்டுமா மருந்துமாதோ".

என்றபடி அகந்தைப் பேயை வறுமையென்னு மருந்தாலும் அவ்வகந்தையால் உண்மை நோக்கும்

உளக்கண் தெரியாதிறுமாப்புறும் நோயைத் தண்டனையென்னும் மருந்தாலும் மாற்றி நீதி வழியில் நிறுத்தி யாள்வரென்க.

இனிப், பருத்தியூர்ச் சுப்பிரமணியக் குருக்கள் முதலிய சிலர் நாங்கள் கூறும் ஆசீர்வாதம் சிவவாக்காகிய சிவாகம வசனமாதலால் சிவவாக்காகிய வேதங் கூறியபின் அதன்சார சிவாகம வசனமாகிய ஆசீர்வாதங் கூறி அதன்பின்புதான் மனிதர் வாக்காகிய தேவாராதிகள் கூறவேண்டு மென்று ஒரு நியாயங் கூறுகிறார்கள், இவர்களது புறக் கண்ணுக்கு மனிதர் போலத் தோன்றிய திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர், ஆலாலசுந்தரர், மணிவாசகர் நால்வரும் நிர்மல சிவசொரூபர்களே. சமல பசுக்களாகிய மனிதரை உய்விக்கவே மானைக்காட்டி மான்பிடித்தல்போல மனிதரூபர்களாய் வந்தருளின ரென்னும் உண்மையை இந்நால்வர்களின் திவ்விய சரித்திர விளக்கச் சைவநூல்கள் பலவற்றிற் காணலாம். அதற்கு அவகாசமில்லாவிடினும் இக்குருக்கள் மாரெல்லாரும் எல்லாக் கோயில்களிலும் இந் நால்வர் முதலிய உண்மை நாயன்மார்களைச் சிவமாகவே தியானித்துச் சிவாசன சிவமூர்த்திசிவமூல மந்திரங்களாற் பூசித்து வருகிற முறையாலும் நன்கு தெளியலாம்.

நாங்கள் அப்படிப் பூசிக்கவில்லை, கோயில்களில் எத்தனையோ சில செம்பு மூர்த்திகளிருக் கின்றன அத்தனைக்கும் கோயில் அதிகாரிகள் கட்டாயத்துக்காக நீள ஒரு தீபங் காட்டி விடுதலன்றி வேறில்லை என்று ஒதுக்கிவிடுவார்களாயின் அதனை

நன்கு விசாரித்து அதற்குரிய பயன் செய்வது அக் கோயிலதிகாரிகள் கடமையாம். ஒருவாறு அதுவும் பராமுகமானல், சேதனு சேதனப் பிரபஞ்சங்க ளெல்லா வற்றையும் அடிமையு முடைமையுமாகத் தன் வியாபகத்துள் வைத்தாளுகின்ற சர்வாதிகாரி யாகிய ஈசனுமத் திறைவனெருவன் கடமையேயாம் அஃதிருக்கட்டும்.

இனி, இவர்கள் கூறும் ஆசிர்வாதம் முழுதும் ஆகமவசனமோ வென்பதை அறிஞர்கள் ஆராய்ந்து கூறுவாராக, இவர்களோ சமய விசேஷ நிர்வாண ஆசாரியாபிஷேக சிவசம்ஸ்காரம் பெற்றவர்கள். இவர்கள் செய்யும் சிவயாகசாலையுள்ளே அதீக்ஷதர் புகுதப்படாதென்று சிவாகம விதி கூறுகின்றார்கள். கூறும் இவர்களே சிவாகம விதிப்படி சிவதீக்ஷை பெருதவர்களும் வேதங்களின் பதார்த்தந் தெரிந்து கொள்ளாது நெட்டுருப் பண்ணினவர்களுமாகிய அப்பிராமணர்களை யாகசாலையுட் புகுத்தி ஆசீர் வாதம் கூறும்போது இன்னின்ன விஷயங்கள் அபிவிருத்தி யாகும்படி எங்களுக்கு "அநுக்ருஹ ணந்து" அநுக்கிரகம் செய்க, என்று வேண்டிக் கொள்ளும் வசனங் கூறுகின்றார்களே, இதுவும் சிவாகம வசனந்தானே? இது போலும் வசனம் இவர்கள் ஆசீர்வாதத்திற் பெரும்பாலுமுள்ளன, இவ்வாறு சிவ தீக்ஷிதர்களாகிய இவர்கள் அவதீக்ஷி தர்களாகிய அவர்களை நோக்கி வேண்டிக்கொள்ளும் படி எந்தச் சிவாகமங் கூறியதோ? இதனை, ஆசீர் வாத மெல்லாம் சிவாகம வசன மென்று சாதிக்கு மிவர்கள், இன்ன ஆகமத்தில் இன்னபடலத்தில்

உள்ளதென்று அச் சுலோகங்களை வெளியிட்டு விளக்குவாராக. இம்மட்டோ பற்பல பொருள்களை ஒவ்வொரு பகுதியிலும் பன்னூறு வாக்கியங்களாக அடுக்கிக் கூறுவது எந்தச் சிவாகமத்திலோ? மேலும் விரிப்பானேன். ஸ்தாலிபுலாக முறையில் அறிஞர் நன்குணர்வர். இவர்கள் வேண்டிக் கொண்டதற்கு "ததாஸ்து" அப்படியே ஆகட்டுமென்று அப்பிரா மணர்கள் கூறக் கேட்டு மகிழ்கின்றார்களே. இம் முறையில் ஆசீர்வாதஞ் செய்கின்றவர்கள், நீங்கள் வேண்டியபடி ஆகட்டு மென்று அநுக்கிரகிக்கின்ற அவதீக்ஷிதர்களாகிய அப்பிராமணர்களா? எங் களுக்கு அநுக்கிரகிக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிற சிவ தீக்ஷிதர்களாகிய சிவப்பிராமணர் களா வென்பதை அறிஞர் அறிவாராக. சிவ சந்நிதி யில் இவர்கள் ஆசீர்வாத மென்ற இவ்வசனங்கூறி வேண்டிக்கொள்ளும் போது பக்கத்தே மடைத் தொழிலாளர் நிற்பினும் அவரும் ததாஸ்து என்று கூறுவது வழக்கம். (மடை-அன்னம்) இவ்வழக்கம் இவர்கள் செய்யும் சிவாலய பூசை பரிசாரகரிடத்தி லும் இவர்கள் வேண்டிக்கொள்ள அவர்களும் அப் படி யாகட்டு மென்று அநுக்கிரகிப்பதாக முடிகிற தன்றோ? சிவப்பிராமணர்களாகிய இவர்கள் மடைத் தொழிலாளர் வரையுமுள்ள அதீக்ஷிதப் பிராமணரை நோக்கி வேண்டிக் கொள்ளுதலாலும், அவர்கள் இவர்களுக்கு அப்படியாகட்டு மென்று அநுக்கிர கித்தலாலும், இவர்களுக்கு அவமான மில்லையாம் இவர்கள் முக்கியமாகக்கொண்ட சிவாகமமுறைப்படி சிவதீக்ஷாதி சிவசம்ஸ்கார முழுதும் பெற்றுச் சிவ பூசாதி சிவநியம சீலராய் வாழும் சுத்தமரபினர்

களாகிய உத்தமர்கள் தேவாராதி திராவிட வேதங் கூறியபின் தங்கள் ஆசீர்வாதமென்று நினைத்துக் கொண்டு அதீக்ஷிதர்களை வேண்டுகின்ற வசனங் கூறுகின்றது பெருத்ததோர் அவமானமாம். இத ுல் கொடிறும் பேதையுங் கொண்டது விடா தென்றபடி இவர்கள் பிடித்ததே சாதிக்கும் நிலைமை யார்க்குந் தெளிவாம். இவர்கள் கூறும் ஆசீர்வாத நிலையே இம்மட்டி லிருப்பதும் உற்று நோக்காமல் இது சிவாகம வசனமென்று சிவாகமத்துக்கும் இழிவு நேரக் கூறுவது எந்நலங்கருதியோ? மேலும் விரிப்பானேன். அமைக. இவர்கள் சிவயாகசாலையுள் ஆசீர்வாதங்கூறி வேண்டிக்கொள்ளும் போது அங் குள்ள சிவதீக்ஷிதர்களாகிய சிவப்பிராமணர்களே ததாஸ்து அப்படி ஆகட்டுமென்று கூறுவரெனில் அதுபற்றி விவாதமில்லை. ஆயினும் அவர்களும் அப்போது சிவபிரானைப் பிரார்த்தித்துக் கொண்டு சிவாநுக்கிரகத்தால் அப்படியாகட்டு மென்று கூறுதலே ஆணவமல முனைப்படங்கி நிற்கும் உத்தம நிலையாம். ஆகவே இவர்கள் ஆசீர்வாதமென்று கூறும் இவ்வசனம், சிவசந்நிதி யில் சிவபிரானை நோக்கியே இவைஇவை அபி விருத்தியாகும்படி அனுக்கிரகிக்க வேண்டுமென்று பிரார்த்தித்தலும், சிவபிரான் அப்படியாகட்டு மென்று தன்முகத்து வந்த சிவ தீக்ஷாவான்களாகிய சிவத்துவிஜர் வாக்கின் வழியாகக் கூறியருளுத லும் விளக்குமென்பதே சிவாகம விதி விரோதமுருத பொருத்தமாம், இவ்வாறன்றி விபரீதார்த்தம் கொண்டு அதீக்ஷிதர்களை வேண்டுதலும் அவர்கள் அநுக்கிரகித்தலுமா மென்று கொள்ளுதல் சிவாகம

விரோதமேயாம். இம்முறையில் அநுக்கிரகஞ் செய்கவென்று வேண்டியது சிவசம்ஸ்காரம் முழுதும் பெற்றுச் சிவனுக்குப் பிரதிநிதிகளாய் விபூதி பிரசாதங் கொடுத்து அநுக்கிரகிக்கின்ற சிவத்துவிஜர்களாகிய பிராமணோத்தமர் களையேயாம் இவ்வுண்மையே பொருத்த மென்பதை உற்றுநோக்கி இனியாவது தங்கள் சிவயாகசாலையுள்ளே சிவாகம விரோதமாக அதீக்ஷிதரைப் புகுத்தி அவர்தருந் "ததாஸ்து" என்று கூறும் வழக்கத்தை மாற்றி மேற்கூறிய முறையே நடத்துவதுடன் தாங்கள் கூறும் ஆசீர்வாதம் ஆகம வசனமென்று அபிமானித்துத் தேவாராதி திராவிடவேதங்களைப் பிறபட ஒதுக்கிக் கலகம் விளைக்காமல் சிவாகம விதியுண்மைப்படி முற்படப் பேணிக் கர்த்தா முதலியர் திருப்தியுறச் செய்வாராக. வடமொழி யபிமானத்தால் வடமொழி நூலெல்லாம் வேதாகமங்களென்று கூற முடியுமா? தமிழ்மொழி யபிமானிகள் தமிழ் நூலெல்லாம் தேவார திருவாசகாதி திராவிட வேதமே என்று கூறுகின்றூர்களா? ஆதலால் அபிமானத்தால் தங்கள் ஆசீர்வாதம் ஆகமவசனமென்பதை யொழித்து முன்னையோரில் வித்துவசாமர்த்திய முள்ளவரால் சொற்றொடரடுக்கு முதலிய நயம் விளங்கக் கூறிய தென்னும் உண்மை கண்டு மாறு நீங்கிச் சிவாகமச் செந்நெறி நடத்தி, யாவரையும் மகிழ்விப்பாராக.

இனிச் சிவதீக்ஷை பெருதவர்கள் பார்க்கப் புசித்தலுங் கூடாது என்று சிவாகமம் விதித்திருப்பதாகக் கூறும் இவர்களிற் சிலர் சிவதீக்ஷை பெருத

வர்களும் சிராத்தாதிகளில் விபூதி தரியாதவர்களும் ஆகிய அப்பிராமணர்களைத் தங்கள் வீடுகளில் போசனசாலையுள் அழைத்து வந்து குருமூர்த்திகளாகக் கொண்டு பணிந்து இருகைகளும் நீட்டி அட்சதை வாங்கிச் சிரமேற்றரித்துக் கொண்டு சிராத்தாதி காரியங்கள் அவர்கள் சொல்லியும் காட்டியும் செய்விக்கின்ற மந்திரக் கிரியைகளை அந்தப்படியே சொல்லியும் செய்தும் அப்பிராமணர் முன்னிலையில் சிரார்த்தன்னம் புசிப்பித்தும் புசித்தும் இம் முறையே சிவாலயாதிகளிலும் சிவாகமத்துவேஷிகளாகிய அப்பிராமணர்களைக் குருமூர்த்திகளாகக் கொண்டே புண்ணியாக வாசன முதலியவெல்லாம் அவர் சொல்லுகிற வைதீக வழியாகச் செய்துவருகின்றூர்கள். இதனால் இவர்கள் சிவாகமங்களிற் கூடாதென்று விதித்த அவதீக்ஷிதர்களை மேற்கொள்ளுதலுங், கூடுமென்று விதித்த தேவார திருவாசகாதி திராவிட வேதபாராயணஞ் செய்து வரும் சிவதீக்ஷிதர்களை ஒதுக்கித் தள்ளுதலும் செய்துவருகின்ற சிவாகம விரோதிகளென்பது செவ்வே தெளிவாகின்றது. இவர்கள் செயல்கள் மேலும் விரிப்பிற் பெருகும் ஆதலால் இம்மட்டிலேயே இவர்கள் தோஷ குணாதிகள் தெரிந்த கோயிலதிகாரிகளும் திருப்பணியாதி செய்து வரும் சிவதரும சீலர்களும் இக்குருக்கள்மார்களை மகோற்சவ கும்பாபிஷேகாதிகளில் தலைவராக்காமல், ஆரிய வேத சிவாகமங்களிற் போலவே சீரிய தேவாராதி திராவிட வேதங்களிலும் அன்பு மிக்குள்ளவர்களும் சிவாலயாதிகளுக் குரிய சிவாகம விதிக்கிரியாதிகளெல்லாம் தாங்கள் செய்ய வல்லவர்களுமாகிய

உத்தம சிவப்பிராமணர்களைத் தலைவராக்கி நடத்தினாற்றான் சிவாகம விரோத சிவாபசாரங்களின்றிச் செவ்வே நடைபெறும். மேற் கூறிய தேவாராதிய தமிழ் மொழித் துவேஷிகளாகிய சில குருக்கள் மார்கள் தங்களைத் தலைவராக்குதல் முதலியவற்றால் வரும் பெரும் பொருள் பெறுங்கருத்தால், முதலில் மிக நயந்து இணங்கி இதமாகவே பேசுவார்கள் அதனை உள்ளபடி நம்பி அவர்களைச் சர்வாதிகாரத் தலைமையாதிகளில் நியமித்தால் ஆரம்பத்தில் இதமாக நடந்து வந்து அவசர சமயத்தில் மாறிக் கொண்டு தாங்கள் பிடித்ததே சாதிப்பார்கள். அந்தச் சமயம் மற்றோர் உத்தம சிவாசாரியர் இருக்குமிடந் தேடிச் சென்று அழைத்து வந்து சிவாகம விரோதமின்றி ஒழுங்காக நடத்தமுடியாது விரோதமானாலும் அவர்கள் நோக்கப்படி தான் நடத்த நேரும். அதனால் சிவாகம விரோத சிவாபசார முண்டாம், அது தங்களையுஞ் சாராமல் அதிகாரிகளும் திருப்பணியாளர்களும் ஆரம்பிக்கு முன்னரே நன்றாக விசாரித்து ஆராய்ந்து தெரிந்து தமிழ் வேதாதிகளையும் உள்ளபடி பேணிப் போற்றி வருகின்ற உத்தம சிவாசாரியர்களைத் தலைவராக நியமித்து வைத்து, விதிவிரோதம் வராமல் நடத்துவதே திருவருளையே வேண்டி நிற்கும் அவ்வதிகாரி கடமையாம்.

இனி இக்கலியாரம்பந் தொடுத்து, ஐயாயிரத்தின் மேலுஞ் செல்லா நின்ற இத்தனை வருஷ காலமாக, உத்தேசம் முப்பத்தையாயிரம் சனத்தொகுதியினராயிருந்தும், ஒருவராவது கனவினும் சைவ சமய நிலை வழுவாது, சுபாசுப காரியங்களெல்லா

வற்றினும் விபூதியை முற்கொண்டே நடத்திவரு கின்றவர்களும், ஒன்பது புராதன சிவாலயங்களையே தங்கள் சொந்தக் கோயில்களாகக் கொண்டு ஒன்பது வகையினராய் விளங்குகின்றவர்களும், அக்கோயில் சிவப்பிரசாதமாகிய திருநீறு திருமாலைகள் முன்னர் பெற்றே கல்யாண சுபகாரியஞ் செய்து வருகின்ற வர்களும், கலியாரம்ப முதல் தங்கள் குல பரம்ப ரைக்குக் குருமூர்த்தி களாயமர்ந்த ஆதிசைவகுல சிவாசாரிய முகமாகவே, சிவபஞ்சாக்ஷர உபதேசம் பெற்று வாழுகின்றவர்களும் நாட்டுக்கோட்டை நகரத்தார் என்னுங் குழுக்குறியினருமாகிய மகுட தன வைசியர்களெல்லாரும் தேவார திருவாசகாதிய தமிழ் வேதங்களில் அதிப்பிரியர்களாய் அபிவிருத்தி செய்துவருகின்றார்கள், இவ்வொன்பது கோயில் களில் ஒன்றாய் இவ்வைசியர்க ளெல்லாரும் காவிரிப் பூம் பட்டினத்திலிருந்து பாண்டி நாட்டுக்கு வந்த போது முதலில் ஒருங்கு கூடி இருந்து வழிபாடு செய்து வந்த தலைமை பெற்றது இளையாத்தக்குடிக் கோயில். இக்கோயிற்குரிய ஏழுவகுப்பின் முதன்மை பெற்ற ஒக்கூர் வகுப்பினரில் ஒருவகையினர் தேவ கோட்டை பழ. செ. குடும்பத்தார். இக் குடும்பத் தலைவர்க் கிளைய ராகிய **பழநியாண்டி** செட்டியார வர்கள் ஆத்தங்குடிச் சிவாலய கும்பாபிஷேக காலத் தில் தேவார திருவாசகாதி பாராயணம் பிற்படவும் ஆசீர்வாதம் முற்படவும் செய்தார்கள். இவர்கள் அவ்வூரிலேயே அப்போது அக்கோயிலில் தாபித்தற் குரிய யந்திரங்களின் பூசை நடக்கும் போதும் ஒவ்வொரு காலத்தும் தேவார பாராயணத்திற்குப் பின்னரே ஆசீர்வாதம் நடந்துவந்த நீதிமுறையை

அவ்வூர்ச் சித்தாந்த சைவ நெறித் திட்பக்த சில ராகிய சு. வீர. குமாரர். கதிரேசன் முதலியர் தெரிவித்து, இம் முறையை மகா கும்பாபிஷேக பூஜாகாலத்தில் மாற்றப் படாதென்று பன்முறை கூறியதையுங் கொள்ளாமலும், இக்கும்பாபிஷேகத்துக்கு முன் அதி சமீபகாலத்தில் வயிரவன்பட்டி பிள்ளையார்பட்டியில் நடந்த கும்பாபிஷேக பூஜா காலங்களில் ஆசீர்வாதத்துக்கு முன்னரே தேவார பாராயணம் நடந்து வந்தது தெரிந்திருந்தும் அதையும் நோக்காமலும், ஆரிய வேதத்தின் பின் சிரிய தமிழ் வேதமும், பின் வாத்திய நிருத்தமும், அதன்பின் ஆசீர்வாதமும், பின் விபூதி கொடுத்தலும் செய்வதே சதாமங்களந் தருவதாமென்று சிவாகமம் விதித்த விதிக்கு விரோதமாகத் தேவார திருவாசகாதிய திராவிட வேதத்தைப் பிற்பட ஒதுக்கிவிட்டது, இவர்கள் சொந்தக் கருத்தென்று நினைக்க மனம் இடம் தரவில்லை. ஏனென்ருல் இவர்கள் தங்கள் சொந்தமாக நடத்திவருகின்ற கோயிலில், அதற்கு உயிர்போற் சிறந்தது தமிழ் வேத மென்றே தெளிந்து அத்தேவார திருவாசகாதி பாராயணம் நித்திய நியமமாக அதி சிரத்தையுடன் நடத்தி வருகின்ற பேரன்பர்களாதலாலென்க. இனிக் கரைப்பார் கரைத்தாற் கல்லுங் கரையும் என்றபடி, தமிழ்மொழித் துவேஷிகளாகிய சில குருக்கள்முதலியர், பக்கத்திருந்து பலமுறையும் நீங்கள் வடமொழி ருசி தெரிந்தவர்களன்றோவென்று நயந்து கூறி வற்புறுத்தின தற்கிணங்கித் தேவாராதிகளைப் பிற்பட ஒதுக்கினதன்றி வேறில்லை இது சிவசம்மத மன்றென்பது அங்கு அதிசிறப்பாய்

முடிய வேண்டிய சமயம் நிகழ்ந்த குறியாலும் யாவரும் தெரிந்ததே. இப்படியே முன்னர்த் தேவாராதிகளை ஒதுக்கிய சில கும்பாபிஷேக ஸ்தலங்களில் நடந்த தீக்குறி பிரசித்தமே. இப்போது திருநாகேசுரத்திலும் யாகசாலைப் புறத்து வடக்குப் பிரகாரத்தில் காந்தவிளக்கில் அபாயம் நிகழக்கூடிய ஒரு குறிப்புத் தோன்றி அத் திருப்பணி கும்பாபிஷேக கர்த்தாவின் பேரன்பின் பெருக்கத்தால், யாதொரு தீங்குமில்லா தொழிந்தது பரம்பரையாகச் சிவசமய மேற்கொண்டு தேவார திருவாசகாதிகளையே பேணி வருகின்ற நம்மவர்கள், மேற்கூறி வந்தன வெல்லாம் நன்கு நோக்கிச் சிவாகம விரோதம் வராத படி தேவாராதிய செந்தமிழ் மொழியை மேலும் மேலும் பாதுகாத்து வளர்த்து வரும்படி, உமையொரு பாகத்திமயவர் பெருமான் கமல நாண்மலரடி எமதுளமிருத்தி நாடொறும் போற்றுதும் பீடுறற் பொருட்டே.

இனி வடமொழிச் சிறப்பும் அதிவிஸ்தாரம், அவகாசம் நேர்ந்துழி, அடியேன் சிற்றறிவுக் கேற்பத் திருவருள் தெரிவித்தமட்டில் விளக்கக் கருதினேன். இவ்வடமொழியை வெளியிட்ட சிவபிரான், அதன் இலக்கணம் பாணினி முனிவர்க்கருளினர். அம்முனிவர் செய்த அவ்விலக்கண நூலை விரித்துப் பாஷியஞ் செய்தவர் திருவருட் பரிபூர்த்தி பெற்ற பதஞ்சலிபகவான். சிவபிரானும் அவனருள் பெற்ற தவமுனிவர்களும் பேணும் பெருந் தகுதியினதும், சிவபிரானருளிய வேத சிவாகமமாதிய முதல் நூல்களையுடையதும் ஆகிய அரும் பெரும் மகிமைவாய்ந்த இவ்வடமொழியை, நமது சைவர்

களிற் சிலர் தங்கள் பாடல்களிலாவது பேசும் வார்த்தைகளிலாவது வரப் படாதென்று அதி வைராக்கியத்துடன் புறக்கணித்து ஒதுக்குகின்றுர் கள். இது, தீவினை வசத்தாற் பிறந்து, சாப வசத்தா லுலைந்து, சைவ நிந்தகர்களாய்த் திரிகின்ற சில பிராமணர்கள், சிவாதிப்பிரீதிகரமான தமிழ்மொழி யை நிந்தித்தொதுக்கி, வடமொழி ஒன்றையே வந்தித்துப் பேணி வருதல் நோக்கி, அதற்கு எதிர் மறையாய்ச் செய்ததேயாம். இக்காலத்திலும் பல உத்தமப் பிராமணர்கள் தமிழ் மொழியை அதிப் பிரியமாகப் பேணி வளர்த்து வருகின்றுர்கள். சில அதமப் பிராமணர்கள் தமிழை நிந்திப்பதற் கெதி ராக வடமொழியைப் புறக்கணிப்பது சைவ நிலை சார்ந்த நம்மவர் பெருந்தகுதிக்குப்பொருத்தமன்று. சிவனருள் வழியினின்று சிவனுகந்தனவே செய்யும் சிவானுபூதிப் பெருஞ்செல்வர்களாகிய நமது முன்னை யோரும், அவர்கள் காட்டியருளிய செவ்வழியே போற்றி நின்றெழுகும் பின்னையோருமாகிய நம்ம வர்களெல்லாரும் தம் பாடல் முதலியவற்றில் வட மொழியும் விரவ வைத்துத் தென்மொழி வடமொழி யாகிய நன்மொழிக ளிரண்டையும் பேணிவருதல் தெரிந்தும், நம்மவரில் சிலர் மாத்திரம் சில அதமப் பிராமணர் தமிழை இகழ்வதுநோக்கி வடமொழியை இகழ்ந்தொதுக்கி அவ்விஷயத்தில் அவ்வதமர்களைப் போல அதம நிலையிற் புகுதாமல் சிவனருளிய வட மொழியும் பேணி வளர்த்து வரும்படி திருவருளைப் பிரார்த்திக்கிறேன்.

முற்றும்.